இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பரவஸ்து சின்னையா சூரி

ப. இராதாகிருஷ்ணா



சாகித்திய அக்காதெமி

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னைமாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுனை மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி: நேஷனல் மியூசியம், புதுதில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பரவஸ்து சின்னையா சூரி

ஆங்கில மூலம்:

ப. இராதாகிருஷ்ணா

தமிழாக்கம்:

ஆனைவாரி ஆனந்தன்



சாகித்திய அக்காதெமி

## பொருளடக்கம்

**சமர்ப்பணம்**

மறைந்த பண்டிட் கோபால ரெட்டி (பெங்களூர்)
அவர்களுக்கு

# 1

# வாழ்க்கைச் சுவடுகள்

சென்னையில், பத்தொன்பதாம் நூற்றாண்டில், வியத்தகு சாதனைகளைப் படைத்த ஒருவர் வாழ்ந்திருந்தார். பதினாறாம் வயது வரையில் 'அ'கர எழுத்துப் பயிற்சியைக்கூடப் பெற்றிராத அவர், முப்பதாம் வயதளவில் ஒரு பெரும் புலமையாளராய்த் திகழ்ந்தார். ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் சிறிது காலமே வாழ்ந்திருந்த அவரது வாழ்க்கையில் மூன்றில் ஒரு பங்குக்குமேல் பள்ளி, கல்லூரிகளில் தெலுங்கு மொழியைக் கற்பிப்பதிலேயே கழிந்தது.

புகழ்பெற்ற இரு சிறந்த நூல்களையும் வேறு ஒரு சில நூல்களையும் மட்டுமே படைத்துள்ள அவர், தெலுங்கு இலக்கிய உலகில் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக மிகுந்த செல்வாக்குடன் விளங்கியவர் என்பது நடுநிலையாளர்களின் மதிப்பீடாகும். தனக்கு முன்பிருந்த மரபுகளையெல்லாம் உடைத்தெறிந்து, தனக்கெனவோர் தனிப்பாணியை வகுத்துக் கொண்டு காலத்தையே பின்னோக்கிச் சுழலச் செய்தவர் அவர். இலக்கிய வானில் ஒளிவீசிக் கொண்டிருந்த அவரது செல்வாக்கு அவரது எதிர்ப்பாளர்களிடமிருந்து மிகவும் இரக்கமற்ற எதிர்ப்புகளையும், கடும் கண்டனங்களையும் பெற்றுப் பாழ்படுமளவுக்குப் பரந்தோங்கியிருந்தது. என்றாலும் செயல்திறமிக்க அவரைத் தெய்வமாகத் தொழுது, அவரது சாதனைப் படைப்புகளைத் தெய்வீகமாக்கிப் போற்றிப் பின்பற்றும் கல்வியாளர்களை இன்றும்கூட அவர் பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

அந்தச் சாதனையாளர்தான் பரவஸ்து சின்னையா. அவரது பெயரில் இணைந்துள்ள 'சூரி' எனும் பட்டப்பெயர் கூட விவாதத்துக்குரியவொன்றாகி விட்டது.

தற்போதைய ஆந்திரப் பிரதேசத்தின் வடக்குப் பகுதியில் இருந்து, சில தலைமுறைகளுக்கு முன் சென்னைக்குக் குடிபெயர்ந்த ஒரு வைணவக் குடும்பத்தில் பிறந்தவர்தான் சின்னையா. அவரது முன்னோர்கள் பரவஸ்து மதத்தைப் பின்பற்றுபவர்களாக இருந்தனர். குடிப்பிறப்பால் பிராமணர் அல்லாத வைணவக் குடும்பத்தினர் அந்த சாத்தானி வகுப்பைச் சேர்ந்தவர்கள். என்றாலும், பிராமணர்களுக்கேயுரிய பழக்க வழக்கங்களையும், பிற சிறப்பியல்புகளையும் அக்குடும்பம் கடைப்பிடித்து வந்தது. அவர்கள் கார்கேய கோத்திரத்தைச் சேர்ந்த ஆபஸ்தம்ப சூத்திரர் என்றும் யஜுஸ்சாகாத்யாயின்கள் என்றும் தங்களை அழைத்துக் கொண்டனர்.

சின்னையா 1809-ல் (பிரபவ ஆண்டில்) பிறந்தார். சில ஆராய்ச்சியாளர்கள் அவர் 1806-ல் பிறந்தவரெனக் கருதுகின்றனர். சின்னையாவின் தந்தையாரின் பெயர் வேங்கடரங்க ராமானுஜாச்சார்யலு. அவர் சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள இராமானுஜகூடத்தில் மதபோதகராக இருந்தவர். அவர் வடமொழி, தமிழ், பிராகிருதம், தெலுங்கு ஆகிய மொழிகளில் நல்ல புலமையாளராக இருந்தார் என்று கூறப்படுகிறது. இறைப் பணியாற்றி அமைதியான வாழ்க்கையை மேற்கொண்டிருந்த அவர், பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீ ராமானுஜாச்சாய்லு என்னும மேல்சாதி வைணவப் பெரியாரின் கவனத்துக்கு ஆளானார். அதன் காரணமாக வைணவ மதத்தைத் தோற்றுவித்த திரு. இராமானுஜாச்சாரியார் அவதரித்த திருப்பெரும்புதூர் கோவிலில் தங்கி வைணவத் தத்துவத்தைப் பரப்பும் பணியில் ஈடுபடுமாறு சின்னையாவின் தந்தையை வற்புறுத்திக் கேட்டுக்கொண்டார், பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ ராமானுஜாச்சார்யலு. அவரது வேண்டுகோளை ஏற்று மிகவும் பழுத்த வயதான நூற்றுப்பத்து ஆண்டுகள் (!) வரை அங்குத் தங்கி திராவிட வேதத்தை வாயாரத் துதித்து வைணவ மதநெறிகளை 1836-ஆம் ஆண்டுவரை போதித்து வந்தார்.

வேங்கடரங்க ராமானுஜாச்சார்யலுவுக்கு ஒரு மகளும், அடுத்து ஒரு மகனும் பிறந்தனர். மகள் இளமையிலேயே விதவையாகிவிட்டாள். அவளது தம்பிதான் சின்னையா. ஒரே மகன் என்பதால் சின்னையா மிகவும் செல்லமாக வளர்க்கப்பட்டவன்

போலும்! இல்லாவிடில் பதினாறாம் வயது வரையிலும் எழுதப் படிக்கத் தெரியாமல் இருந்திருக்க முடியாதே! சின்னையா, தன்னைச் சூழ்ந்திருந்த சமய வாழ்க்கையை மட்டுமே கவனித்துக் கொண்டிருந்திருப்பான் போலும்!

தந்தையார் நடத்திய சமயப் பாடங்களை ஆழ்மனத்தால் லயித்துக் கேட்டுக்கொண்டிருந்த அவன் தனக்கென ஒரு கல்வியைப் பெறவேண்டும் என்பதையே நினைக்கவில்லை போலும்!

ஒரு நாள், திருப்பெரும்புதூருக்கு வந்த சின்னையாவின் தந்தையினுடைய நண்பர் ஒருவர், அந்த ஒரே மகனைத் தமது பாதுகாப்பில் எடுத்துக் கொண்டார். அவர்தான் சின்னையாவின் முதல் ஆசிரியரான காஞ்சி இராமானுஜாச்சார்யலு என்பவர். அக்கால மரபுப்படி நாமலிங்கானுசாசனம் அல்லது அமரகோசம், பால இராமாயணம், ஆந்திர நாம சங்கிரஹமு (செய்யுளில் அமைந்த தெலுங்குப் பேரகராதி) முதலியவற்றை சின்னையா மனப்பாடம் செய்து கற்கவேண்டியிருந்தது.

சென்னையிலிருந்த ஆங்கிலேயர்களுடன் காஞ்சி இராமானுஜாச் சார்யலுவுக்குத் தனிப்பட்ட முறையில் நல்ல செல்வாக்கு இருந்தது. அதன் அடிப்படையில், சின்னையாவின் தந்தையை சென்னைக்குக் குடிபெயருமாறும், அவ்வாறு சென்றால், அங்கு பிராமணர் எதிர்ப்பு இயக்கத் தலைவராகவும், வணிகராகவும் இருந்த கஜுல லஷ்மி நரசிம்மம் சிரேஷ்டி என்பவர் மூலம் கிழக்கிந்தியக் கம்பெனி அதிகாரிகளிடம் வற்புறுத்தி உயர்நீதி (உச்சநீதி) மன்றத்தில் சட்ட வல்லுநர் பதவியொன்றைப் பெறலாம் என்றும் ஊக்கப்படுத்தினார்.

காஞ்சி இராமானுஜாச்சார்யலூவின் தூண்டுதலால் சென்னைக்குக் குடிபெயர்ந்த தந்தையுடன் சின்னையாவும் சென்று, அங்குத் தங்கி, தமிழ், பிராகிருதம் ஆகிய மொழிகளையும், இலக்கணங்களையும் குருவழிக் கல்வி மூலம் தொடர்ந்து பயின்றார். மேலும், காஞ்சி இராமானுஜாச்சார்யலுவிடம் தருக்க, நியாய, மீமாம்சை உள்ளிட்ட தருக்கவியல் பாடங்களையும், ஸ்ரீராம சாஸ்திரிகள் என்பவரிடம் வேத, வேதாந்தப் பாடங்களையும் கற்றுத் தேர்ந்தார். அதன்பின், சின்னையா ஹயகிரீவ மந்திர உபன்யாசகர் ஆனார்.

சின்னையா சித்தாந்த கௌமுதி, வடமொழி இலக்கியங்கள், ஆந்திர சப்த சிந்தாமணி, அதர்வண காரிகாவளி (இவ்விரண்டும் வடமொழியிலமைந்த தெலுங்கு இலக்கண நூல்கள்),

ஆகியவற்றையும், அப்ப காவியம் எனும் செய்யுள் மொழிபெயர்ப்பு நூலையும் கற்றார். இன்னும் என்னென்ன கற்றார், யார்யார் கற்பித்தார்கள் என்பன போன்ற விவரங்கள் கிடைத்தில. அவர் ஆங்கிலமும் கற்றார். எனினும் அவர் அம்மொழியில் எவ்வெவற்றை யார்யாரிடம் கற்றார் என்பதும் தெரியவில்லை. அவருக்கு முப்பது வயது ஆனபோது மரபுவழிப் பாடங்களிலும் ஆங்கிலத்திலும் சிறந்த புலமையாளராக அங்கீகாரம் பெற்றுவிட்டார். அதே நேரத்தில், கிழக்கிந்தியக் கம்பெனி நிர்வாகத்தினரின் நல்லெண்ணத்தையும் எப்படியோ சம்பாதித்து விட்டார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

தந்தையின் மறைவுக்குப்பின், சின்னையா கடுமையான வறுமையில் வாடினார் என்று கூறப்படுகிறது. அப்போது ஆப்டான் மிஷன் பள்ளியில் கிறித்துவப் பாதிரியார்களுக்குத் தெலுங்கு கற்பிக்கும் ஆசிரியரானார். ஆனால் அப்பணியில் எப்போது சேர்ந்தார் என்பதைச் சரியாகக் கூறமுடியவில்லை. அப்பள்ளியில் புலவர் தேர்வுக்குச் செல்லும் மாணவர்களுக்குப் பயிற்சியளித்தார். அப்போது, சின்னையாவின் புலமையும், திறமையும் கலுவாலபள்ளி ரெங்கநாத சாஸதிரி என்னும் நீதி அலுவலரின் கவனத்தை எட்டியது. புலவர்கள், கவிஞர்கள், அறிஞர்களை அரவணைக்கும் புலவராக இருந்த சாஸ்திரியின் இல்லத்தில் ஒரு சொற்பொழிவாற்றினார் சின்னையா. 'இந்திய அணியிலக்கணக் கொள்கைகள்' பற்றிய சின்னையாவின் அன்றைய சொற்பொழிவு கேட்டவர்களை மணிக்கணக்கில் மந்திரத்தால் கட்டுண்டவர்களைப் போல அமர்ந்து கேட்கச் செய்தது. இதன்மூலம் கலுவாலபள்ளி ரெங்கநாத சாஸ்திரியின் நன்மதிப்பைப் பெற்றார், சின்னையா. மேலும், கோமளீஸ்வர பிரபு சீனிவாச பிள்ளை என்னும் இன்னொரு பிரமுகரின் தொடர்பும் சின்னையாவுக்குக் கிடைத்தது. சென்னையில் புகழ்பெற்ற அறநிறுவனமாகவும், கல்வி நிறுவன மாகவும் உள்ள பச்சையப்பன் அறக்கட்டளையின் அப்போதையத் தலைவராக இருந்தவர் திரு. சீனிவாசப்பிள்ளை.

1837-ல் விக்டோரியா பேரரசியின் முடிசூட்டுவிழா நடந்தபோது, அவரைப் புகழ்ந்து ஒன்பது பாக்களை இயற்றிய சின்னையா, ஓர் இளங் கவிஞராக மலர ஆரம்பித்தார்.

''விக்டோரியா சக்ரவர்த்தினி மகுடாபிஷேக மகோத்சவம் பாடிய ரத்னமுலு'' என்ற தெலுங்கு-வடமொழி கலந்த தலைப்பிலமைந்த அக்கவிதையின் நடையோட்டமும், அவரது கையெழுத்தும் மிக அழகாகவும், மற்றவர்கள் பொறாமைப்படத் தக்கதாகவும் இருந்தன.

அக்கவிதை அப்போதைய ஆட்சியாளர்களின் கவனத்துக்கு எட்டியபோது ஆங்கிலேயர்கள் மீதான சின்னையாவின் பற்று அடையாளம் காணப்பட்டுவிட்டது போலும்! அன்று முதல் சின்னையாவின் முன்னேற்றத்திற்கான ஒரு புதிய பாதை அவருக்கு ஆரம்பமாகிவிட்டது. அதன்பின் அவர் தனது பாதையில் பின்னோக்கித் பார்க்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அந்நாளில்,

மாநில உயர்நிலைப்பள்ளி
பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி
கிறித்துவ உயர்நிலைப்பள்ளி

ஆகிய மூன்று பள்ளிகளே சென்னையில் இருந்தன. உயர்நிலைப் பள்ளிகள் என்ற பெயரைக் கொண்டிருந்தபோதிலும், அவை இன்றையக் கல்லூரிகளுக்கு நிகரானவை. இப்பள்ளிகளில் முதல் பட்டப்படிப்பு வரை மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்கப்பட்டது. இம்மூன்று பள்ளிகளில், முதலாவது, ஆங்கிலேய அலுவலர்களுக்கு வட்டார மொழியைக் கற்பித்து வந்தது; இந்துக் கல்வி நிலையமாக விளங்கிய இரண்டாவது பள்ளி, பின்னாளில் நீதிக்கட்சியின் செயல் மையமாகவும், பிராமணர் எதிர்ப்பு இயக்க மையமாகவும் செயல் பட்டது. மூன்றாவது பள்ளி கிறித்துவ மதத்தைப் பரப்புவதற் கென்றே இயங்கிவந்தது. இங்கு ஒரு தெலுங்கு ஆசிரியராகத் தமது பணியைத் தொடங்கினார், சின்னையா.

சீனிவாச பிள்ளையின் கொடைத்தன்மையால் 1844-ல் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் சின்னையாவுக்கு அதே ஆசிரியப் பணி கிடைத்தது. அப்பள்ளியில் அவர் 1847 வரை பணிபுரிந்தார். அப்போது, ஆண்டுதோறும் பள்ளி நிறுவனரின் பிறந்தநாளை பள்ளி ஆண்டுவிழா நாளாகக் கொண்டாடும் பழக்கம் இருந்துவந்தது. அவ்விழாவில் நிறுவனரைப் புகழ்ந்து பாடும் புலவர்களின் கவித்திறனைப் பாராட்டிச் சிறப்பிப்பது வழக்கம். ஒவ்வோர் ஆண்டும் அவ்விழாவில் சின்னையா தெலுங்கு-வடமொழிக் கவிதைகளை இயற்றிப் பாடுவது வழக்கம். அவ்வாறு, அப்போதிருந்த பெயர்பெற்ற மேல்சாதிப் புலமையாளர்களை விடச் சிறந்த கவிதைகளைப் பாடியமைக்காக 1845, 1846, 1847- ஆம் ஆண்டுகளில் தொடர்ந்து மூன்று முறை சிறப்பிக்கப்பட்டார் சின்னையா. அக்கவிதைகள் 1850-ஆம் ஆண்டில் 'பச்சையப்ப யசோமந்தணமு' என்னும் தலைப்பில் பின்னர் வெளியிடப்பட்டன.

மேல்சாதிப் புலமையாளர்கள் குறிப்பாக பிராமணர்கள் சின்னையாவின் புலமையைத் தாழ்த்தி அலட்சியப்படுத்தினர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. ஆனால் அதற்கெல்லாம் துவண்டு போகாமல் பண்டைய இலக்கியங்களில் தனது புலமையைப் பெருக்கிக் கொண்டு வந்த சின்னையா, பின்னாளில் அவரது எதிரிகளைத் தமது அரிய சாதனைகளால் வாயடைத்துப் போகச் செய்ததுடன் அடங்கி ஒடுங்கவும் செய்து தான் பெற்ற அவமதிப்புகளையெல்லாம் ஈடுசெய்துகொண்டார். சி.பி.பிரௌன் கூட அவரை "*சாத்தானி சின்னையா*" என்றுதான் எப்போதும் அழைப்பார். இப்படிப்பட்ட ஏளனங்களை அவர் மௌனமாகச் சகித்துக் கொண்டுதான் இருந்தார் என்றாலும், அவருக்கு இழைக்கப்பட்ட அவமதிப்புகள் அவரது அடிமனத்தில் உழன்று உறுத்திக்கொண்டே இருந்ததாகத் தெரிகிறது. எங்கே எப்படியெல்லாம் அவை நிகழ்ந்தன என்பது பற்றியெல்லாம் பின்னர் கூறப்படும்.

சென்னையில் புனித ஜார்ஜ் கோட்டைக் கல்லூரி 1812-ல் தோற்றுவிக்கப்பட்டது. அரசுத் துறைகளில் இருந்த ஆங்கிலேயர்களுக்காக மட்டுமே தொடங்கப்பட்ட அக்கல்லூரியில் இந்துச் சட்டமும் பயிற்றுவிக்கப்பட்டது. அங்கு தெலுங்கு ஆசிரியராக இருந்த புதூரி சீத்தாராம சாஸ்திரி பணியிலிருந்து ஓய்வுபெற்ற பின் அக்கல்லூரி மூடப்பட்டது. அதே இடத்தில் தான்1840-ல் கிழக்கிந்தியக் கம்பெனியார் மாநிலக் கல்லூரியைத் தொடங்கினர். அக்கல்லூரியில் உள்ளூர் மாணவர்களும் கல்வி கற்க அனுமதிக்கப்பட்டனர். ஓய்வு பெற்ற புதூரி சீத்தாராம சாஸ்திரியை மீண்டும் தெலுங்கு ஆசிரியராக மாநிலக் கல்லூரி நிர்வாகம் நியமித்தது. அவர் 1847 வரையில் ஆசிரியராகப் பணியாற்றினார்.

மாநிலக் கல்லூரியின் முதல் முதல்வராக இருந்த ஏ.ஜே. அர்பத்நாட் என்பவர், சென்னை மாநிலக் கல்வித்துறை இயக்குநராகவும் இருந்து வந்தார். சீத்தாராம சாஸ்திரி ஓய்வு பெற்றபின் 1847-ல் அப்பணியை ஏற்றுக்கொண்ட சின்னையா, சென்னைப் பல்கலைக் கழகம் தொடங்கப்பட்ட ஆண்டான 1857 வரை, பத்தாண்டுக் காலம் அங்குப் பணிபுரிந்தார். அங்கு, பெரும்புலவரான புராணம் ஹயகிரீவ சாஸ்திரி என்பாரின் கடும் போட்டிக்கிடையேதான் சின்னையா அப்பணியில் காலத்தைக் கடத்த வேண்டியிருந்தது.

1844ல் சின்னையா 'ஆந்திர சப்தானு சாசனம்' எனும் தெலுங்கு இலக்கண நூலொன்றை வடமொழியில் இயற்றினார். அதையே அவர் தெலுங்கு மொழியில் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்து அதற்கு ''பாடியாந்த்ர வியாகரணம்'' என்று பெயரிட்டார். சில ஆராய்ச்சியாளர்கள் இத்தெலுங்குப் பதிப்பு 1840-லேயே இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இவ்விரு ஆண்டுகளுமே தவறானவைதாம்.

'சூத்ராந்த்ர வியாகரணமு' என்பது சின்னையா வடமொழியில் இயற்றிய இன்னொரு நூலாகும். இந்நூல் எழுதப்பட்ட காலமும் வெளியான காலமும் தெரியவில்லை. ஆனால் இவையாவும் 1858-ல் வெளிப்பட்ட ஒரு மாபெரும் படைப்புக்கான முன் முயற்சிகளாகவே தோன்றுகின்றன. இவரது இலக்கண நூல்கள் எல்லாம் இவருக்கு முன் இருந்தவர்களின் படைப்புகளைவிடப் பிற்காலத்தவை என்பதும் அவர்களின் நூல்களுக்குப் போட்டியாக எழுதப்பட்டவை என்பதும் வெளிப்படை. சின்னையாவின் காலத்தில் வாழ்ந்த சில மூத்த அறிஞர்களால் எழுதப்பட்ட பல்வேறு இலக்கண நூல்கள் அப்போது இருந்தன. அவற்றையெல்லாம் வகுப்பில் பாடமாகக் கற்பித்த அனுபவத்தால், அவற்றை மதிப்பிட்டு, ஆய்ந்து, குறை நிறைகளை உணர்ந்து காலத்திற்கேற்ற மாற்றங்களைச் செய்யும் வாய்ப்பு சின்னையாவுக்குக் கிடைத்தது.

புனித ஜார்ஜ் கோட்டைக் கல்லூரியின் முதல் தெலுங்குப் பண்டிதராக இருந்த வேதம் பட்டாபிராம சாஸ்திரி (1760 - 13.9.1820) என்பவர் ''பட்டாபிராம பண்டிதீயமு'' அல்லது 'பாடியாந்த்ர வியாகரணமு' என்னும் பெயரில் 1816-ல் வெளியிட்ட நூல் அக்காலத்திய அறிஞர் பெருமக்களின் நல்ல வரவேற்பைப் பெற்றது. மேலும் எப்.டபிள்யூ.எல்லீஸ் என்பவருக்காகப் பணி புரிந்ததோடு 'தாதுமாலா' என்னும் நூலையும் அவர் எழுதினார். அது ஒரு புகழ்பெற்ற நூலாக அமைந்தது. அவர் பணிபுரிந்த இடத்தில் இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரி என்பவர் பணியமர்த்தப்பட்டார். சி.பி.பிரௌன் என்பாருடன் பணிபுரிந்து, அவரது பாராட்டையும் பெற்ற குருமூர்த்தி, 1836-ல் 'தெலுங்கு வியாகரணமு' என்னும் நூலை இயற்றினார். அந்நூல் முந்தைய அறிஞர்களின் படைப்பைவிட மிகவும் விரிவாகவும் மேம்பட்டதாகவும் இருந்தது.

இவ்விரு இலக்கண நூல்களையும் வகுப்பில் கற்பித்த அனுபவத்தைக் கொண்டு அவற்றை மேம்படுத்தும் நோக்கில், அவ்வப்போது ஈடுபட்டு வந்த சின்னையாவின் மனதில் ஒரு

கிளர்ச்சி உருவெடுத்தது என்றாலும், பின்னாளில் வெளிவரப்போகும் ஒரு மாபெரும் படைப்புக்கான அடித்தளத்தை உருவாக்குவதில் மிகமிகப் பொறுமை காத்துவந்தார்.

அக்காலத்தில் ஆங்கிலேயர்களும் மதித்துப் பின்பற்றக்கூடிய மரபு ஒன்று வழக்கத்திலிருந்தது. சென்னை மாநிலக் கல்லூரியின் எத்துறையில் ஒருவர் ஆசிரியராக வந்தாலும் அவரது பெயருடன் 'சாஸ்திரி' என்ற பட்டமும் பொறிக்கப்பட்ட இரண்டு தங்கக் காப்புகள் அரசின் செலவில் முழுதுமாக இலண்டனில் இருந்து தருவிக்கப்பட்டு வழங்கப்பெறும். வேதம் பட்டாபிராம சாஸ்திரி என்பவர் பெயராலும், பதவியாலும் சாஸ்திரியாக விளங்கியவர். நியோகி பிராமணரான குருமூர்த்தி சாதாரணமாகப் பட்டங் களையெல்லாம் விரும்பாதவர் என்றாலும் அதனை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. அவருக்குப்பின் பிராமணரல்லாத சின்னையா பதவியேற்றதும் 'சாஸ்திரி' பட்டத்தைப் பெயருடன் இணைத்துக் கொள்ளத் தயங்கினார். அல்லது அக்காலத்திய சமுதாய நிலை காரணமாக அப்பட்டத்தை அவர் பயன்படுத்தக்கூடாது என்ற கட்டாயம் இருந்திருக்கலாம். கல்லூரி முதல்வராகவும் கல்வித்துறை இயக்குநராகவும் இருந்தவருடன் சின்னையாவுக்கு இருந்த நெருக்கம் காரணமாகவும், அன்றையச் சூழலில் மிகவும் சிறப்பானவராகக் கருதப்பட்டதன் காரணமாகவும் அவரது தகுதியை, புலமையைச் சிறப்பிக்கும் வகையில் வேறொரு பட்டத்தைத் தமது பெயருடன் இணைத்துக் கொள்ளுமாறு அவருக்கு வாய்ப்பு தரப்பட்டிருக்கலாம். என்றாலும், சின்னையா தம் பெயருடன் சூரி (புலமையாளர்) என்னும் பட்டத்தை இணைத்துக் கொண்டதற்கான சரியான விவரங்கள் கிடைத்தில. 1849-ல் அச்சிடப்பட்ட சென்னைப் பல்கலைக் கழக ஆளுநர்களின் ஆங்கில ஆண்டறிக்கையிலிருந்து சின்னையா 1848-49- ஆம் ஆண்டு தொடங்கி 'சூரி' பட்டத்தைப் போட்டுக் கொண்டார் என்பது மட்டும் தெரியவருகிறது. சின்னையா மீது பற்றுக்கொண்ட பச்சையப்பா அறக்கட்டளையின் தலைவர் கோமளீஸ்வர பிரபு சீனிவாச பிள்ளை என்பவரும் பல்கலைக்கழக ஆளுநர்களில் ஒருவராக அப்போது இருந்தார்.

1847-ல் சி.பி. பிரெனுக்காக தெலுங்கு மகாபாரதத்தின் ஆதிபர்வத்தை அச்சிட்ட வையாகரணம் இராமானுஜாச் சார்யலுவுக்கு சின்னையா உதவியபோது கூட ''ப. சின்னையா'' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. சென்னை மாநகரக் காலக்கணிதக் குறிப்பேடு, சென்னைப் பல்கலைக்கழகக் குழுமத்தின் உயர்நிலைப்

பள்ளியில் சின்னையா 1846-ல் தெலுங்கு உதவியாசிரியராகப் பணியில் சேர்ந்தார் என்று கூறுகிறது. அதே பள்ளியில் 1847-48-ல் தெலுங்கு கண்காணிப்பாளராகச் செயல்பட்டபோது கூட அவரது பெயர் வெறும் 'சின்னையா' என்றே அறியப்படுகிறது. இவற்றை உறுதிப்படுத்தும் ஆவணங்கள் உள்ளன. எனவே சின்னையா 1848-49-க்குப் பின்னர்தான் 'சூரி'யானார் என்று தெரிகிறது. துவ்வூரி வேங்கடரமண சாஸ்திரி போன்ற சின்னையாவின் ஆதரவாளர்கள் சிலர், 'சூரி' பட்டம் அரசால் அவருக்கு வழங்கப்பட்டது எனக் குறிப்பிட்டுள்ளனர் என்றாலும் சான்றுகள் அதற்கெதிராகவே உள்ளன.

குப்தார்த்த பிரகாசிகா என்னும் நூலின் ஆசிரியரான 'கல்லூரி வேங்கடராம சாஸ்திரி' என்பவர் சின்னையாவின் பெயரையும் சூரி என்ற பட்டத்தையும்,

சின்ன (சிறிய) + ய் + அசூரி (புலமையில்லாதவன்),

இடையிலுள்ள 'ய்' சின்னையாவின் இலக்கண விதிகளின்படி வழுக்கொலியாகும் என்றெல்லாம் கூறுபோட்டு மகிழ்ந்தார். இப்படிப்பட்ட மிகவும் ஈவிரக்கமற்ற எதிர்ப்புகளையெல்லாம் சின்னையா அப்போது எதிர்கொள்ள நேர்ந்தது.

இலக்கியத்தரம் மிக்க உரைநடை நூலான ''நீதி சந்திரிகா'' வைத் தமது சொந்த அச்சகமான 'வாணி தர்ப்பண முத்ராட்சரசாலை'யில் அச்சிட்டு வெளியிட்ட ஆண்டான 1853 முதல்தான் சின்னையா சூரி புகழின் உச்சிக்கு உயர்ந்தார். இதிலிருந்து அவர் அப்போது செல்வச் செழிப்பிலும் உயர்ந்து இருந்தார் என்பதும் தெரிகிறது. அவர் தமது படைப்பை, கல்லூரி முதல்வராகவும் கல்வித்துறை இயக்குநராகவும் இருந்த அர்பத்நாட் என்பவருக்கு நன்றியுடன் அர்ப்பணித்து வெளியிட்டார். இந்த நூலை உருவாக்கும்போது தாம் வகுப்பில் பாடமாக நடத்திய தமது முன்னோடிகளின் நூல்களில் காணப்படும் குறைகளையெல்லாம் களைந்து தன்னுடையதை மேம்பட்ட நூலாக்கும் முயற்சிகளைத் திட்டமிட்டு மேற்கொண்டார்.

சான்றாக, இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரி என்பவர் 1770-ல் எழுதி 1834-ல் வெளியிட்ட 'பஞ்சதந்திரகதலு' என்னும் நூலைத்தான் சின்னையா பாடமாக நடத்த வேண்டியிருந்தது. சின்னையா எழுதிய நூல், வடமொழியிலமைந்த ஹிதோபதேசம், பஞ்சதந்திரம் ஆகிய நூல்களை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், மித்திரலாபம், மித்திரபேதம், சந்தி, விகாரம்

என்னும் நான்கு தொகுதிகளாக மட்டுமே பிரிக்கப்பட்டிருந்தது. ஆனால் நான்கு தொகுதிகளையும் வெளியிடாமல் முதலிரு தொகுதிகளை மட்டுமே வெளியிட்டு அவற்றைப் பாட நூலாகவும் வைக்கச் செய்தார். அந்நூல்கள் இன்றுவரை உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் அனைவரும் கட்டாயம் படித்தாக வேண்டிய நூலாக அமைந்திருப்பதிலிருந்தே அவற்றின் சிறப்பையும் தரத்தையும் நாம் நன்கு உணரமுடியும். பண்டைய செவ்வியல் இலக்கியக் கவிதை நடையை ஒத்த ஒரு புதிய இலக்கிய உரைநடையை அந்நூலில் உருவாக்கியிருந்தார் அவர். அந்நூலின் சிறப்பியல்புகள் பற்றி அடுத்த இயலில் காண்போம். அதே 1853-ஆம் ஆண்டில் 'சப்த லட்சண சங்கிரஹம்' என்னும் இன்னொரு இலக்கண நூலையும் சின்னையா வெளியிட்டார்.

1855-ல் நீதிகளைப் போதிக்கும் ஒரு நூறு தெலுங்குக் கவிதைகளைக் கொண்ட கவிதைத் தொகுப்பு ஒன்றை வெளியிட்ட சூரி, அதில் தமது கவிதைகள் சிலவற்றையும் சேர்த்திருந்தார். அத்தொகுப்பு ''நீதிசங்கிரஹமு'' எனும் பெயரில் வெளிவந்தது. பதினோராம் நூற்றாண்டில் தெலுங்கு மொழியில் பெருங் கவிஞராகத் திகழ்ந்த நன்னயன் என்பவர் இயற்றிய, இலக்கண ஆய்வு நூல் என்று அனைவராலும் போற்றப்படும் 'ஆந்திர சப்தசிந்தாமணி' என்னும் நூலுக்கு விளக்க ஆராய்ச்சியுரையாக 'அட்சரகுச்சமு' என்னும் நூலை சின்னையா எழுதினார். இந்நூல் எழுதப்பட்ட சரியான காலமும், வடமொழியில் இவரே எழுதிய 'சூத்ராந்திர வியாகரணம்' என்னும் நூல் எழுதப்பட்ட காலமும் சரியாகத் தெரியவில்லை. 1858-ல் வெளிவந்ததும், அவர் தெலுங்கில் எழுதிய நூல்களுள் தலைசிறந்ததுமான 'பாலவியாகரணமு' என்னும் நூலை எழுதி முடிப்பதற்குள், ஒரு தெலுங்கு இலக்கண நூலை விரிவான அளவில் எழுதியும், திருத்தியமைத்தும், பல்வேறு கோணங்களில் ஆராய்ச்சி செய்து கொண்டும் இருந்தார் என்பதை நாம் உய்த்துணர முடிகிறது.

'பாலவியாகரணமு' நூல் வெளிவந்த ஆண்டான 1858, சின்னையா சூரியின் வாழ்வில் மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பான ஆண்டு எனலாம். இந்நூல் அவருக்குப் புகழைக் கொண்டுவந்து சேர்த்தது; கூடவே அவரது கொள்கைகளும், செயல்களும் கடும் விமர்சனங்களுக்குட்பட்டன. நல்லதென் றாலும், கெட்டதென்றாலும் இந்த நூல்தான் இலக்கண இலக்கிய உலகில் எதிர்ப்புக்கிடமே இல்லாத சின்னையா ஒரு மகுடம் சூட்டி விளங்கிடக் காரணமாய் அமைந்தது. அவர் இயற்றியதெல்லாம்

அண்மைக்காலம் வரை நடைமுறைச் சட்டமாகவே இருந்து வந்தது. இவ்விலக்கண நூலதான் காலத்தைப் பின்னோக்கி ஓடச் செய்து சென்னை மாநிலமெங்கும், தெலுங்கு பேசும் மக்கள் வாழுமிடமெங்கும் இடம்பெற்று கல்வித் துறையில் இருவேறு மொழிப்பாடங்கள் இடம்பெறக் காரணமாயமைந்தது.

அந்நூல் வெளிவந்த நாள்முதலே அனைத்து நிலையிலுள்ள பள்ளி கல்லூரி மாணவர்களும் கட்டாயம் படித்தாக வேண்டிய பாடநூலாகிவிட்டது. அந்த அளவுக்கு கல்வியாளர்கள் மத்தியிலும், அரசாங்கத்திலும் செல்வாக்கைப் பெற்றிருந்தார், சூரி. அக்கால மரபிலக்கியப் புலவர்களும், எழுத்தாளர்களும் சமமாக மதித்துப் போற்றுமளவுக்குப் புகழை எட்டியிருந்த சூரி பரிந்துரைக்கும் பாணியிலேயே கவிதைகளையும், உரைநடை நூல்களையும் எழுத வேண்டியிருந்தது. முதல் பதிப்பாக வெளியிடப்பட்ட பண்டைய இலக்கிய நூல்கள் கூட சின்னையா சூரியின் இலக்கண-இலக்கிய விதிகளுக்கேற்ப திருத்தியமைக்கப்பட்ட பின்பே வெளியிடப்படும் நிலை உருவானது. மொழி பற்றிய முடிவு எதுவாயினும், அவரின்றி எடுக்கவியலாது என்னுமளவுக்கு ஓங்கியிருந்த அவரது மேலாண்மை காரணமாக அனைத்துப் புதிய முயற்சிகளும் புதிய ஆய்வுகளும் முடக்கப்பட்டு இலக்கிய வரலாறே தடைபட்டுப் போனது. மெயின் பிரபு எழுதிய நூலை மாதிரியாகக் கொண்டு, தாமஸ் லூ மிசிடஸ் ஸ்ட்ரேஞ்ச் என்பார் எழுதிய, ''இந்து தர்மச் சட்டங்கள்'' (Manual of Hindu Law) என்னும் நூலை சூரி மொழிபெயர்த்தார். நீதிசந்திரிகா நூலில் கையாண்ட அதே மொழி வேகத்தையும் எழுத்து நடையையும் கொண்டிருந்த அம்மொழிபெயர்ப்பு நூல் ஆங்கில ஆட்சியாளர்களிடையே உடனடி வரவேற்பைப் பெற்றது. அதன் காரணமாக, சூரி இறந்த பின்னும் 1863, 1869-ஆம் ஆண்டுகளில் அந்நூல் மேலும் இரு பதிப்புகளைக் கண்டது. 'இந்து தர்ம சாஸ்திர சங்கிரஹமு' என்னும் பெயரிலமைந்த இந்நூலாக்கப் பணியில் சூரிக்கு உதவியாக இருந்தவர் நரஹரி கோபால கிருஷ்ண செட்டி என்பவர். இந்த நூலாக்க முயற்சி கூட இதற்கு முன் ஏழு ஆண்டுகளுக்கு முன் வெளிவந்த, வத்தம் வாசுதேவ பரப்பிரம்ம சாஸ்திரி என்னும் உயர்சாதிப் பண்டிதர் இயற்றிய ''வியவகார தர்ப்பணமு அல்லது பூபாளியாமு'' எனபதற்குப் போட்டியாக எழுந்ததேயாகும். இந்நூல் மரபிலக்கிய உரைநடை வகையிலிருந்து வேறுபட்டும் சூரி வகுத்த இலக்கண விதிகளிலிருந்து மாறுபட்டும் இருந்தது. 'ஜான் பிரெயெர் தாம்' (John Freyer Tham) என்பாரின் நூலை மூல நூலாகக் கொண்டு அமைந்திருந்தது வத்தமின் நூல்.

1857-ல் சின்னையா சென்னைப் பல்கலையில் முதன்மைத் தெலுங்குப் பண்டிதரானார். 1861- டிசம்பரில் ஓய்வு பெறும்வரை அப்பணியில் இருந்தார். 1865-ல் புகழ்மிக்க வடமொழிப் பேரகராதியான 'விஸ்வகோச'த்திற்கு விளக்கவுரை எழுதி வெளியிட்டார். வடமொழியில் சப்தமஞ்சரிக்கு இணையாகக் கருதப்படும் 'விபக்தி போதினி'யை 1860-ன் ஆரம்பத்தில் தெலுங்கில் எழுதினார்.

தெலுங்கு மொழிப் பொருள் விளக்க அகராதி ஒன்றைச் சூரி ஏழு தொகுதிகளாக எழுதினார். இவற்றில் முதல் தொகுதி முழுவதும் அவரது சொந்தக் கையெழுத்திலேயே அமைந்துள்ளது. இவற்றை அவர் எப்போது எழுதினார்; எப்போது தொடங்கி எப்போது முடித்தார் எனும் விவரங்கள் கிடைத்தில. ஒரு முழுபெரும் இலக்கண நூலையாக்கும் பணியில் அவர் ஈடுபட்டிருந்ததன் ஒரு துணை விளைவு இது அல்லது மறுதலையாக இந்நூலையாக்கியதன் விளைவாக ஒரு பெரும் இலக்கணநூல் உருவானது என்பது மட்டும் நன்றாகத் தெரிகிறது. இந்நாள்வரை அக்கையெழுத்துப் பிரதிகள் அச்சேறாமலேயே உள்ளன. என்றாலும் காக்கிநாடாவில் உள்ள ஆந்திர சாகித்திய பரிஷத், பின்னாளில் 'சூர்ய ராயேந்திர நிகண்டு'வைத் தொகுத்தபோது சின்னையாவின் தெலுங்கு மொழியகராதிக் கையெழுத்துப் பிரதிகளைப் பயன்படுத்திக் கொண்டது. பணியிலிருந்து ஓய்வு பெற்றவுடனே சின்னையாவுக்கு நீரிழிவு நோய்ப்புண் ஏற்பட்டது. இறுதியாக, அதுவே ஜனவரி 1862-ல் அவரை வீழ்த்தியும் விட்டது.

முதன்முதலாகப் பணியில் சேருவதற்கு முன்பே சி.பி. பிரௌன் கோரியபடி, 'தசாவதாரம்' என்னும் இதழாசிரியராக இருந்த சூரி, அவருக்கு 'இராமாபி உதயமு', என்னும் பண்டைய இலக்கிய நூலின் கையெழுத்துப் பிரதிகளை எழுதிக் கொடுத்துக் கொண்டிருந்தார். ஒரு செய்யுளின் பொருளறிதல் மற்றும் அதன் பயன்பாடு தொடர்பான புலமை உதவி கேட்டு, 'வர்த்தமான தரங்கிணி' என்னும் இதழின் ஆசிரியருக்கு சூரி எழுதிய கடிதமொன்று தற்போது கிடைத்துள்ளது. 1842 அக்டோபர் 22 நாளிட்ட அக்கடிதம் வியப்பூட்டும் வகையில் பண்டையச் செவ்வியல் செய்யுள் நடையும் அவர் காலத்திய உரைநடையும் கலந்ததாக அமைந்துள்ளது.

சின்னையா சூரியின் வாழ்க்கை அமைதியானதாகவும், தந்தையின் மறைவுக்குப் பிறகு ஒரு குறுகிய காலத்தைத் தவிர

மற்றபடி எவ்விதக் குழப்பமும், சிக்கலுமற்றதாகவும் இருந்தது எனலாம். அவருக்கு மிகவும் நெருக்கமாயிருந்த சமகாலப் புலவர் அல்லது வெளிப்படையான எதிரி என்று யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. அறிஞர் பெருமக்களால் பெரிதும் விவாதிக்கப் பட்ட மொழிச்சிக்கல்கள் எதிலும் அவர் கலந்து கொண்டதற்கான குறிப்புகள் எதுவும் காணப்படவில்லை.

தமது படிப்புண்டு, எழுத்துண்டு என்று, அவற்றில் மட்டுமே அக்கறை கொண்டு, தனக்கென ஒரு சுயவட்டத்தை உருவாக்கிக் கொண்ட சூரி அதற்குள்ளேயே சுழன்றுகொண்டு இருந்தார் போலும்! அவரது காலத்தில் நிகழ்ந்த இலக்கியம் - மொழி சார்ந்த வாதப் பிரதிவாதங்களிலெல்லாம் அவர் தீவிரப் பங்கேதும் கொண்டதாகத் தெரியவில்லை. சமுதாயத்தில் அவர் புகழின் உச்சிக்குச் சென்றதைப் பரிகசித்து எழுதப்பட்ட சில அரைகுறைத் தெலுங்குக் கவிதைகள் கூட கிடைத்துள்ளன. ஆனால் அவற்றிற்கெல்லாம் வெளிப்படையான எதிர்ப்பு எதையும் சூரி வெளிப்படுத்தியதாகத் தெரியவில்லை.

சாலே ஜாந்த்ர ஸபா மத்யே
சாத்தானிஹ் பண்டிதோத்தமாஹ்

எனும் வடமொழிப் பழமொழி ஒன்று உயர்சாதி அறிஞர்களிடையே உண்டு. கீழ்ச்சாதி மக்கள் மட்டுமே சூரியைப் பேரறிஞராகப் போற்றுவதை மறைமுகமாக விமர்சிப்பதாக இப்பழமொழி அமைந்துள்ளது. ஏதோவொரு பொறாமையுள்ளம் கொண்ட பெயர் சொல்ல விரும்பாத புலவர் ஒருவரால் இத்துண்டுப் பழமொழி எழுதப்பட்டிருக்கலாம். ஆனால், சின்னையா சூரியோ, தமக்கு எதிரான எந்த விமரிசனத்துக்கும் பயப்படாமல், கவலைப்படாமல், மறுப்பைக் காட்டாமல் துணிந்து செயல்பட்டவர் என்பது மட்டும் தெளிவாகத் தெரிகிறது.

தமது பணி, படிப்பு, படைப்புகளில் மட்டுமே கவனம் செலுத்திய அவர், தமது நிழற்படத்தைக்கூட விட்டுச் செல்லவில்லை எனபது குறிப்பிடத்தக்கது. அவரது நூலொன்றின் மேலட்டையில் அவருடைய புகைப்படம் என்று ஒன்றை அவர் இறந்து பல ஆண்டுகளுக்குப் பின் வெளியிட்டு, பின்னர் அது 'தேவராஜ சுதிமணி' என்னும் பட்டம் கொண்ட 'தஞ்சை நகரம் தேவப்பெருமாளையா' என்பவரின் புகைப் படம் என அடையாளம் காணப்பட்டு விலக்கப்பட்டது.

பொதுவாக, சின்னையா சூரி ஓர் ஒழுக்கமான இறைநெறி வாழ்க்கையை வாழ்ந்து ஐம்பத்து மூன்றே ஆண்டுக் காலத்தில் தெலுங்கு இலக்கிய வரலாற்றில் அழியாத முத்திரையைப் பதித்தவர். அவரது எதிரிகள் கூட அவரது புலமையைச் சந்தேகிக்க முடியாது. பிராமணரல்லாதவர்களும் பெரும் அறிஞராகத் திகழ முடியும் என்பதை நிரூபிப்பதற்காக அவர் பழமையைப் போற்றி இருக்கலாம். அதில் அவர் வெற்றியும் பெற்றார் என்றாலும் உண்மை நிறைந்த முரண்பாடும் அங்கிருந்தது. அவரது சமகாலப் புலவர்கள் அவரை மதிக்கவில்லை. ஆனால் ஆங்கிலேயர் உள்ளிட்ட பிற அறிஞர்களால் மிகவும் அன்போடும் ஆதரவோடும் மேல்நிலைக்கு உயர்த்தப்பட்டவர். எனினும் தெலுங்கு மொழியறிந்த ஆங்கிலேய அறிஞர்களால் அவர் மதிக்கப்படவில்லை.

காலப்போக்கில் சூரியின் கொள்கைகளையும், காரணகாரிய விளக்கங்களையும் தந்து சாதனை புரிந்தவர்கள் பிராமணர்களே என்பது குறிப்பிடத்தக்கது. அவர்களில் பெரும்பாலோர் பெரும் புலவர்கள்; படைப்பாளிகள்; ஆசிரியர்கள், கல்வியாளர்கள், நிர்வாகத் துறையினர் தவிர்த்த பிற பிராமணரல்லாத சமகால அறிஞர்களுள் பலர், மொழித் திட்டமிடுதலில் சூரியின் இலக்கண விதிகள் புகுத்தப்படுவதை வரவேற்கவில்லை; ஆதரிக்கவில்லை!

சூரி பெற்ற அபரிமிதமான புகழைப் போலவே அவருக்கேற்பட்ட இகழ்ச்சியும் வீழ்ச்சியும் மிக மோசமானவையாக இருந்தன. அவரின் மாணவர்கள் சிலரே அவரது முதுகில் குத்துவதுபோல் அவரைக் காட்டிக்கொடுத்து நம்பிக்கைத் துரோகிகளாயினர்.

இதுகாறும் கண்டவையே ஒரு மொழி இலக்கிய மாமேதையின் வாழ்க்கைச் சுவடுகளாகும்.

தெலுங்கு இலக்கிய வரலாற்றில் சின்னையா சூரி எத்தகைய இடத்தைப் பெறுகிறார் என்பதையும் சென்னையில் அவரது இலக்கியப் பணிகளைப் பற்றியும் அடுத்த இயலில் காண்போம்.

# 2

# சமகாலக் காட்சிகள்

19-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியக் கிழக்கிந்தியக் கம்பெனியாரிடமிருந்து ஆங்கிலேய அரசாங்கத்திடம் அதிகாரம் கைமாறியபோது சின்னையாசூரி சென்னையில் இருந்து அதையெல்லாம் கண்ணுற்றவர். சென்னையிலுள்ள புனித ஜார்ஜ் கோட்டை 1639-லேயே நிறுவப்பட்டதென்றாலும், இந்தியா முழுமையும் அப்போது அவர்களால் வெற்றி கொள்ளப்படவில்லை. இந்திய மண்ணில் தங்கள் பிடிப்பை நிலைப்படுத்திக் கொள்ள, கம்பெனியார் மும்முனை அரசியல் கொள்கையொன்றைப் பின்பற்றினர்.

வர்த்தகம், பேரம்பேசல், மதநம்பிக்கை ஆகிய மூன்று வழிகளில் அவர்கள் இந்திய மாநிலங்களை ஒன்றன்பின் ஒன்றாக இணைக்க ஆரம்பித்தனர். இந்த அணுகுமுறை வெற்றிபெறாததால், ஆயுத மோதல், அரசுகளில் பிளவை உண்டாக்குதல், மன்னர்களிடையே பகையை மூட்டுதல் போன்ற அனைத்துவகை அரசியல் சூழ்ச்சிகளையும் மேற்கொண்டனர்.

மூன்றாவதாக, இந்த நாட்டின் சமூக எழுத்தறிவு நிலைமைக்கேற்பத் தங்கள் பணியாளர்களுக்குப் பயிற்சியளித்து, அவர்கள் மூலம் இந்திய மக்களுக்கு ஆங்கில மொழி வாயிலாக மேலை நாட்டுப் பண்பாட்டைக் கற்பிக்கத் தொடங்கினர். இந்த முறையில் நன்கு திட்டமிட்டு 1720 முதல் கிறித்துவ

இலக்கியங்களை இந்திய மொழிகளில் தயாரிக்கவும் வெளியிடவும் தொடங்கினர்.

1806-ல் கல்கத்தாவுக்கு அருகில் உள்ள சிராம்பூரிலிருந்து தெலுங்கு அச்சகம் சென்னைக்கு வந்தது. 1813-ல் சர்ச் மிஷினரி சங்கமும் (Church Missionary Society) தனியுரிமைச் சட்டமும் (Charter Act) உருவாயின. அதே ஆண்டில் கம்பெனியாரின் புனித ஜார்ஜ் கோட்டைப் பள்ளியும் நிறுவப்பட்டது. 1837-இல் விக்டோரியாப் பேரரசி முடி சூடியபின் எல்லா முயற்சிகளுக்கும் ஒரு புதிய தூண்டுதல் கிடைத்தது. கிழக்கிந்தியக் கம்பெனியின் அதிகாரத்தை ஆங்கிலேய அரசு கைப்பற்றிக் கொண்டது. இன்றைய ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள மசூலிப்பட்டினத்திலும் சென்னையிலும் பள்ளிகள் நிறுவப்பட்டன. 1841-ல் உயர்நிலைப் பள்ளிகள் தொடங்கப்பட்டன. இக்கல்வி நிறுவனங்கள் இம் மண்ணின் சமூகப் பண்பாட்டமைதியில் மெல்ல மெல்ல ஊடுருவிய போதிலும் ஒரு நிலையான தாக்கத்தை உருவாக்கிக் கொண்டிருந்தன. இம்முயற்சிகளின் உச்ச வெளிப்பாடாகத்தான், 'சிப்பாய்க் கலகம்' என்று தவறாகக் குறிப்பிடப்பட்ட முதல் சுதந்திரப்போர் முடிவடைந்தவுடன், 1857-ல் சென்னைப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது.

இத்தகைய செயற்பாடுகள் சென்னை போன்ற உலகத் தொடர்புள்ள பன்மொழி நகரங்களில் நிகழ்ந்து கொண்டிருந்த சூழலில்தான் சின்னையா சூரி பிறந்திருந்தார். அவரது தாய்மொழி தெலுங்கு என்றாலும், வைணவக் குடும்பமாக இருந்ததால் மதம் சார்ந்த மொழியாகத் தமிழையும் அவர் கற்க நேர்ந்தது. வடமொழியிலும் (சமஸ்கிருதத்திலும்) பயிற்சி பெற்று நல்ல புலமை பெற்றார்; பிராகிருதத்திலும் ஓரளவு புலமை பெற்றார். சூழலின் தேவைக்கேற்ப ஆங்கிலத்தையும் அவர் கற்க நேர்ந்தது. ஆங்கிலம் தெரியாமலிருந்திருந்தால் சமுதாயப் படிக்கட்டுகளில் ஏறுவதென்பது அவருக்கு மிகமிகச் சிரமமானதாகவே இருந்திருக்கும்.

ஆங்கிலேயக் கல்விமுறை உயர்சாதி, கீழ்ச்சாதி என்ற பாகுபாட்டைக் கொண்டிருக்கவில்லை என்றாலும் கிறித்துவர்களும், கிறித்துவ மதத்திற்கு மாறியவர்களுமே அரசினரின் ஆதரவைப் பெற்று வசதிகளை அனுபவிக்க முடிந்தது. இந்து மதத்தில் எந்த அளவு ஒருவன் தாழ்ந்த சாதியாக இருக்கிறானோ, அந்த அளவு அவன் ஆங்கிலேயரின் பேராதரவைப் பெறும் நிலை உருவானது.

அது ஒரு கடினமான பாதை என்று அறிந்தபின்னும் சொந்த முன்னேற்றம் கருதி சின்னையாவும் அந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டார்.

மேலைநாட்டாரின் கருத்துகள் கொள்கைகள், இலக்கியப் பண்பாட்டில் ஏற்பட்ட புதுமை மாற்றங்கள் ஆகியவற்றை முதன்முதலாகக் கற்கத் தொடங்கியதன் காரணமாக, இந்தியச் சமுதாயத்தின் அறிவுப் பரப்பும், கல்விப் பரப்பும் எல்லையற்றதாய் விரிந்து பரந்து கொண்டிருந்தன. இந்திய அளவைத் துறைத் தலைவராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்ற கர்னால் காலின் மாக்கென்ஸி (1753-1821) போன்ற அரசு அலுவலர்கள் பொதுவாக இந்திய வரலாறு-பண்பாடு குறித்தும் வரலாற்று ஆவணங்களைத் திரட்டுவதில் தனியார்வம் காட்டினார். கர்னல் காலின், ஆயிரக் கணக்கான தெலுங்கு ஆவணங்களை, காவலி வேங்கட பொற்றையா (1776-1803) மற்றும் அவரது சகோதரரின் உதவியுடன் சேகரித்தார். ஓரளவுக்கு இவை கடந்த காலம் பற்றிய ஓர் உள்முகப் பார்வையைத் தந்தன. 1802-ல் தான் உள்நாட்டு மொழியிலேயே அரசின் அறிக்கைகள் வெளிவரலாயின.

மதத்தைப் பரப்பும் கிறித்துவ அமைப்புகளும் அரசு அலுவலர்களும் வட்டார மொழிகளைக் கற்க ஆரம்பித்தனர். மேலும் இலக்கண நூல்களையும் இரு மொழியகராதிகளையும் வெளியிடத் தொடங்கினர். சின்னையா பள்ளியில் ஆசிரியராகப் பணிக்கு வந்தபோது அத்தகைய சில நூல்களும் சில உரைநடை இலக்கியங்களும் கூட இருந்தன. படிக்கின்ற மாணவர்களின் பயன் கருதியும் அலுவலர்களின் நன்மைக்காகவும், அத்தகைய நூல்கள் வெளிவருவதை ஊக்கப்படுத்தும் நிலை இருந்தது. அவ்வாறமைந்த சில நூல்களை சின்னையா வகுப்பில் பாடம் நடத்தவும் வேண்டியிருந்தது.

மேலை நாட்டு அறிஞர்களின் வருகைக்கு முன்பும், அவ்வவ்த் துறைகளில் முறையான இலக்கியங்கள் படைக்கப்படுவதற்கு முன்பும் இருந்த இந்திய மொழி இலக்கணங்கள் எல்லாம் செய்யுள் நடையில் அல்லது வடமொழியில் சித்தாந்த கௌமுதீ அல்லது அஷ்டாத்யாயீயைப் பின்பற்றி எழுதப்பட்டவையாகவே இருந்தன. அகராதிகள் செய்யுள் நடையில் நாமலிங்கானு சாசனம் அல்லது அமரகோசத்தின் மொழி பெயர்ப்பாகவோ தழுவலாகவோ அமைந்திருந்தன. உரைநடை இலக்கியங்கள் மிகமிகக் குறை வாகவே இருந்தன. பெரும்பாலான பண்டைய இலக்கியங்களும்,

அக்காலப் படைப்புகளும் கூட, எல்லாம் ஓலைச் சுவடியில் எழுதப்பட்ட அல்லது காகிதத்தில் எழுதப்பட்ட வெறும் கையெழுத்துப் பிரதிகளாகவே இருந்தன.

அகர வரிசைப்படுத்தப்பட்ட அகராதிகளைப்பற்றி அப்போது யாருக்கும் தெரியாது. இந்திய மொழிகளின் தோற்றம் குறித்த சரியான செய்திகள் யாருக்குமே தெரியாது. ஏனெனில் பிராகிருதம் வழிவந்த வடமொழியிலிருந்து கிளைத்தவைதான் இந்திய மொழிகள் என்றே அனைவரும் நம்பிக் கொண்டிருந்தனர். வரலாற்றுக் கண்கொண்டு நோக்குவதென்பதை யாரும் நினைத்துக் கூடப் பார்க்காத காலம் அது.

எப்.டபிள்யூ.எல்லீஸ் என்பவர் தாம் எழுதிய 'தெலுங்கு மொழியியல்' நூலில் தெலுங்கு மொழி திராவிட மொழியில் இருந்து தோன்றியிருக்கலாம் என்னும் ஐயத்தை முதன் முதலாக எழுப்பினார். எல்லீசுக்கு தக்க வகையில் உதவி புரிந்தவர் வேதம் பட்டாபிராம சாஸ்திரி (1760 - 13.9.1820) ஆவார். இவர் சென்னைப் புனித ஜார்ஜ் கோட்டையில் முதல் தலைமைத் தெலுங்குப் பண்டிதராகப் பணியாற்றினார். 'பாடியாந்திர வியாகரணம் அல்லது பட்டாபிராம பண்டித்யமு' என்னும் நூலை 1816-ல் எழுதியவர். அவரைத் தெலுங்கு மொழியில் உள்ள வினைச் சொற்களைத் தொகுத்து ''ஆந்திர தாதுமாலா''வை எழுதுமாறு எல்லீஸ் ஊக்கப்படுத்தினார். அதே ஆண்டில் அல்லது அடுத்த ஆண்டில், வில்லியம் கோரே (1761-1831)யின் ''தெலிங்காமொழி இலக்கணம்'' வெளிவந்தது. சிராம்பூரில் இருந்து வெளியான இது, முற்றிலும் ஒரு விளக்க நூலாகவே இருந்தது.

1817-ல் வில்லியம் பிரௌன் (1765-1837) என்பார், ''ஜென்டூ மொழியிலக்கணம்'' ஒன்றை வெளியிட்டார். இந்நாட்டு அறிஞர்களிடையே கூட அந்நூல் நல்ல வரவேற்பைப் பெற்றது. சென்னைப் பாடநூல்-மொழிச் சங்கத்தாரால் இரண்டாண்டு களுக்குப் பாடநூலாகவும் அது வைக்கப்பெற்றது.

ஏ.டி. கேம்ப்பெல் (1760-1840) என்பார் எழுதிய ''ஜென்டூ'' எனப்படும் தெலுங்கு இலக்கண நூலும் அவரது தெலுங்கு - ஆங்கில அகராதியும் 1821-ல் வெளிவந்தன. வேதம் பாட்டாபிராம சாஸ்திரியின் தொண்டுகள் குறித்தும் மற்றும் உதயகிரி சேஷைய்ய சாஸ்திரியைப் பற்றியும் கேம்ப்பெல் தமது நூலில் குறிப்பிடுகிறார். சின்னையா சூரியின் 'பாலவியாகரணமு' நூல் வெளியிடப்பட்ட இரண்டாண்டுகளுக்கு முன்பே ஓர் இலக்கண நூலை எழுதிய

உதயகிரி சேஷைய்ய சாஸ்திரியைக் கேம்பெல் தமது ஆசிரியர் என்றும் குறிப்பிடுகிறார்.

ஜே.சி. மோரீஸ் (1798-1858) என்பாரின் இலக்கண நூல் 1823-ஆம் ஆண்டிலும், சி.பி. பிரௌன் (1798-1884) என்பார் எழுதிய இலக்கண நூல் 1840-ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. சி.பி. பிரௌன் எழுதிய இலக்கணநூல் சூரியின் பாலவியாகரணத்துக்கு ஓராண்டிற்கு முன்பே வெளியாகியிருந்தும் அதன் தாக்கம் எதுவும் சூரியிடம் காணப்படவில்லை. கேம்ப்பெல்லுக்கு அர்ப்பணித்து குருமூர்த்தி சாஸ்திரி என்பார் எழுதிய சிறந்த இலக்கண நூலொன்று 1836-ஆம் ஆண்டில் வெளிவந்தது. இந்நாட்டுப் புலவர் பெருமக்களாலும் ஆங்கில அறிஞர்களாலும் எழுதப்பட்ட பல்வேறு இலக்கண நூல்கள் தொடர்ந்து வெளிவந்தன. அவைகளில் சிலவற்றைப் பாடநூலாகக் கற்பிக்கும் வாய்ப்பு சின்னையா சூரிக்குக் கிடைத்தது. ஆனால் அவற்றில் ஒரு நூல் கூட சூரியின் மனத்திலும் அணுகுமுறையிலும் எந்தத் தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. என்றாலும், சூரி தமது இலக்கண நூலில் இம்மண்ணின் புலமையாளர்கள் சிலரின் விளக்கங்களையும் எடுத்துக் காட்டுகளையும் குறிப்பிட்டு, அவற்றின் மீது உரிய திருத்தங்கள் செய்யவும் தவற்றைச் சுட்டிக் காட்டவும் மட்டுமே மேற்கோளாகக் கையாண்டுள்ளார். இவ்வாறு கருத்திலும், பொருளிலும் எவ்விதப் புதுமையையும் ஏற்றுக்கொள்ளாத, பாராட்ட விரும்பாத பழைமைவாதத்துக்குச் சொந்தக்காரர்தான், சின்னையா சூரி என்றாலும் ஆரம்ப காலத்தில் தன்னைத் தரக்குறைவாக நோக்கிய உயர்சாதிப் புலமையாளர்களையெல்லாம் விட, மரபுத்துவத்திற்கும், பழமைவாதத்திற்கும் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டவர் என்பதை நிரூபித்துக் காட்டினார் சூரி.

ஆங்கிலேயர்களின் காலம் தொடங்கும்வரை தெலுங்குமொழி அகராதிகள் யாவும் செய்யுள் வடிவில்தான் இருந்தன. 1818-ல் வில்லியம் பிரௌன் வெளியிட்ட "ஜென்டூ- ஆங்கில மொழிச்சொற்கள்" (A Vocabulary of Gentoo and English) என்பதுதான் தெலுங்கில் வெளியான முதல் இருமொழிய கராதியாகும். இந்நூலாக்கத்தில் மசூலிப்பட்டினத்தைச் சேர்ந்த மாமிடி வெங்கையாவும் குண்டுமேளா புருஷோத்தம் என்பவரும் உதவியாக இருந்தார்கள்.

இவ்விருவரில் முதலாமவர் 'சப்தார்த்த நிகண்டு (1764)' எனும் நூலின் ஆசிரியர். மேலும் அவர் பிரௌன் எழுதிய நூலை

அடியொற்றி மேலை நாட்டறிஞர்தம் புதுமைப் பாணியில் ''ஆந்திரதீபிகா''வை 1816-ல் எழுதி 1848-49-ல் வெளியிட்டார். இவ்வகராதிகள் உரைநடையில் அகரவரிசையில் அமைந்துள்ளன. வில்லியம் பிரௌன் எழுத்திலக்கணத்தில் இன்றளவில் பயின்றுவரும் தொன்மை ஒலிகளைக்கூட விளக்கியுள்ளார்.

1824-ல் ஏ.டி. காம்ப்பெல் தொகுத்து வெளியிட்ட தெலுங்கு - ஆங்கில மொழியகராதியானது, தெலுங்கு மொழியில் செய்யுள் வடிவிலமைந்த அகராதிகள் கொண்டிருந்த சொற்களைவிட மும்மடங்காக, ஏறத்தாழ 15,000 முதன்மைச் சொற்களை உள்ளடக்கியதாக இருந்தது. ஆனால் தெலுங்கு ஆட்சிமொழியாக ஆகும்போது மிகவும் பயன்படும் எனும் நோக்கில், தெலுங்குச் சொற்களை எல்லாம் ரோமன் எழுத்தில் அமைத்திருந்தார்.

இந்நூலாக்கத்தில் அவருக்கு உதவியாக இருந்த இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரியின் உதவியைப் பெற்று, ஜே.சி. மோரிஸ் என்னும் மற்றொரு மேனாட்டறிஞர், 1835-ல் ஒன்றும் 1839-ல் ஒன்றுமாக இரு தொகுதிகளில் தெலுங்கு இருமொழியகராதியை வெளியிட்டார். இப்பேரகராதி சாமுவேல் ஜான்சனின் ஆங்கிலப் பேரகராதியை ஒத்திருந்தது. அதன்பின் சி.பி. பிரௌன் எழுதிய சிறிய அகராதியும், அவரது பெரும் படைப்பான பிரௌன்ய நிகண்டும் 1852-ல் வெளிவந்தன. இது 42,369 முதன்மைச் சொல்லாட்சிகளைக் கொண்ட தெலுங்கு- ஆங்கில அகராதியாகும். இது குருமூர்த்தி சாஸ்திரி போன்ற சிலரது உதவியால் தொகுக்கப்பட்டதாகும். சி.பி. பிரௌன் 1853-ல் ஒரு தலைகீழ் அகராதியையும் (Reverse Dictionary) 1854-ல் மிஸ்ரபாஷை நிகண்டு ஒன்றையும், 1855-ல் வில்சன் அகராதிக்கு இணைப்பாக ஜில்லா அகராதி ஒன்றையும் வெளியிட்டார்.

1858- வாக்கில் சின்னையா சூரி தொகுத்த தெலுங்கு - தெலுங்கு மொழியகராதியின் கையெழுத்துப் பிரதி ஒன்று உள்ளது. இது தொகுக்கப்பட்ட காலம் எதுவென்று சரியாகத் தெரியவில்லை. அகரவரிசையில் அமைந்து சொற்களின் பொருள் உரைநடையில் அமைந்துள்ளது என்பதைத் தவிர, இது எந்தவொரு படைப்பையும் முன்மாதிரியாகவோ, மேற்கோளாகவோ கொண்டதற்கான குறிப்பு ஏதும் இல்லை. முன்பே குறிப்பிட்டதைப் போல இத்தொகுப்பின் முதல் மடலம் (Folio Volume) சூரியின் அழகிய சொந்தக் கையெழுத்தில் அமைந்துள்ளது. இந்நாள்வரை இது இன்னும் அச்சேற்றப்படாமல், காக்கிநாடாவில் உள்ள ஆந்திர சாகித்திய

பரிஷத் அலுவலகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அதில் உள்ள தகவல்கள் யாவும் ஆந்திர சாகித்ய பரிஷத் 'சூரியாந்திர நிகண்டு' எனும் பெயரில் ஏழு தொகுதிகளாகத் தொகுத்த தெலுங்கு மொழிப் பேரகராதியில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வகராதியில் சூரியினதாகக் கூறப்படும் சொற்களும் அவற்றின் பொருளும் மட்டுமே வெளியுலகுக்குத் தெரியும். மூலத்தில் அவை உண்மையில் எப்படியுள்ளன என்று அறிய முடியவில்லை.

சூரி, எழுத்துப் பிழைகளைத் தவிர்த்து, ஒரு சில இலக்கியச் சொல்லாட்சிகளையும் சேர்ப்பதில்தான் அதிக அக்கறை கொண்டிருந்தார் என்று தெரிகிறது. பிற்காலப் படைப்புகளிலிருந்து எதையும் சேர்க்கவுமில்லை, பயன்படுத்தவுமில்லை. பிற்காலப் படைப்புகளை சூரி முற்றிலுமாகத் தவிர்த்தார்! ஆம்! பழமை வாதமே வெற்றி கண்டது.

அக்காலகட்டத்தில், தெலுங்கில் உரைநடை நூல்கள் மிகச்சிலவே இருந்தன. பண்டைய இலக்கியங்களில் உரைநடை புறக்கணிக்கப்பட்டு, அங்கொன்றும் இங்கொன்றுமாக செய்யுள்களுக்கிடையே இணைப்புரையாகவும், புதிய சொற்களுக்குப் பொருள் கூறும் நீண்ட சுருள் வாக்கியங்களாகவுமே உரைநடை அமைந்தது. ஆனால் 1520 முதல் விஸ்வநாத ஸ்தானாபதியின் 'இராய வாசகமு' போன்ற உரைநடை நூல்கள் ஒன்றிரண்டு வெளிவரலாயின. அவை அக்கால வழக்கு மொழி நடையிலேயே அமைந்திருந்தன. இப்புதிய உரைநடை மரபானது ஆங்கிலேய ஆட்சிக்காலத்தில் இலக்கிய ஆராய்ச்சி உரைகளிலும், அரசு அறிவிக்கைகளிலும், மேலும் சிறப்பாக பாட நூல்களிலும் இடம் பெறலானது.

1770-ல் இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரி என்பவர் எளிமையான உரைநடையில் அவரது காலத்துக்கேற்ற ஒளிவுமறைவில்லாத வழக்கு மொழியிலும் எழுதிய 'பஞ்சதந்திரமு' என்னும் நூல் 1834-ல் வெளிவந்தது. கட்டாயப் பாடநூலாகவும் அது இடம் பெற்றது. சூரி, அந்நூலை 1853 வரை- அதாவது அவரது 'நீதிசந்திரிகா' நூல் வெளியாகுவம்வரை கற்பித்துக் கொண்டிருந்தார்.

சூரியின் நீதிசந்திரிகா, ஆரவாரச் சொல்லலங்கார இலக்கிய நடையில் அமைந்திருந்தது. பாத்திரங்களின் உரையாடலில் மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாக எளிமையான வாக்கியங்கள் இடம் பெற்றிருந்தன. இதன்மூலம், சின்னையா

தமக்கேவுரிய வகையில் இலக்கியம் சார்ந்த உரைநடைப் பாணியை உருவாக்கிக் கொண்டார். அரசின் மொழிப் பாடநூல் நிறுவனத் தலைவராக ஆனபின் நூல்களின் தரத்தைப் பொருட்படுத்தாமல் இலக்கிய நடையில் மட்டுமே எழுதப்பட்ட நூல்களைத் தவிர வேறெதுவும் பாடநூலாக அமையாவண்ணம் சூரி பார்த்துக் கொண்டார். இதன்மூலம், சூரி சமகாலப் படைப்புகளைப் புறத்தே ஒதுக்கி, பழமைத் திணிப்பு அணுகுமுறைகளுக்குச் சாதகமாகவே நடந்து கொண்டு, வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மொழிக்குப் பாதகம் விளைவித்த தவறை மீண்டும் செய்துவிட்டார்.

பாணபட்டர் வடமொழியில் எழுதிய காதம்பரி போன்ற சிறந்த உரைநடை நூல் மிகவும் போற்றப்பட்டு வந்தபோதிலும், உரைநடை என்பது இந்தியாவைப் பொருத்தவரை ஓர் அறியாச் சரக்காகவே இருந்தது.

இந்தியாவெங்கணும் ஆங்கிலேயர்கள் பள்ளி கல்லூரிகளை ஆரம்பித்து வட்டார மொழிகளை ஊக்குவிப்பதிலும், ஒரு புதிய இலக்கிய வகையாக உரைநடையை உருவாக்குவதிலும், கற்பிப்பதிலும் நிர்வாகத் துறையில் அறிமுகப் படுத்துவதிலும் தீவிரமாக முனைந்தபோது அக்கால அறிஞர்கள் இருகூறாகி நின்றனர். ஒரு பிரிவினர், புதிய உரைநடை இலக்கியத்திற்கு ஏங்கி நிற்பவர்களாகவும், மற்றொரு பிரிவினர் பண்டைய இலக்கிய மரபைக் காப்பாற்றுவதற்காக உரைநடையின் எதிர்ப்பாளர்களாகவும் மாறி நின்றனர்.

லாலுஜி (1763-1835) என்பவர் இந்தியில் எழுதிய 'ஹிதோபதேசம்' என்னும் உரைநடை நூல் பிரஜாபாஷா வட்டார வழக்கில் ஒரு புதுமையான பாணியில் அமைந்திருந்தது. அதனை மரபிலக்கியவாதிகள் ஆதரிக்கவில்லை.

மரபிலக்கியவாதிகளாக.....

வங்காளத்தைச் சேர்ந்த மிருத்தியுஞ்சன்
குஜராத்தைச் சேர்ந்த கோவர்த்தன்தாஸ்
மலையாளத்தைச் சேர்ந்த தம்புரான்

போன்றோர் ஒருபுறம் சின்னையா சூரியைப் போல பண்டைய இலக்கிய உரைநடையை நிலை நிறுத்துவதில் தீவிரமாக முனைந்து நின்றனர். மறுபுறத்திலோ,

வங்காளத்தைச் சேர்ந்த ஈஸ்வர சந்திர வித்யாசாகர்
அஸ்ஸாமைச் சேர்ந்த பருவா
ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த பக்கீரா
பஞ்சாபைச் சேர்ந்த பூரான்சிங்
மராட்டியத்தைச் சேர்ந்த மல்ஹர்ராவ்
குஜராத்தைச் சேர்ந்த நர்மல் சங்கர்
மலையாளத்தைச் சேர்ந்த ராஜராஜ வர்மா

போன்றோர், அமைந்து அறியாமையை அகற்றுவதற்கும், தொடர்பு மொழியாக விரிவடைவதற்கும் ஏற்ப எளிதில் கற்கும் வகையிலான உரைநடை இலக்கியங்களை உருவாக்குவதில் முனைந்தனர். தெலுங்கில் கூட, 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து ‘ஹிதசூசனி’ எனும் நூலை 1840-ல் எழுதி 1862-ல் வெளியிட்ட சாமினேனி முத்து நரசிம்ம நாயுடு போன்றோர், புராதனத் தன்மையை நீக்கி மொழியை நவீனப்படுத்த வேண்டும் என்று வலியுறுத்தலாயினர்.

சூரி, தாம் போதித்ததற்கு மாறான ஓர் உரைநடை வகையிலமைந்த ஒரு கடிதத்தை ஓர் இலக்கிய இதழுக்கு அவரே எழுதியிருக்கிறார். என்றாலும் கூட இலக்கியச் சீர்திருத்தம் பற்றிய விவாதங்களில் பங்கேற்க ஆர்வமில்லாதவராகவும், தனித்த மனம் படைத்தவராகவும் புதுமைக்கான முயற்சிகள் அனைத்தையும் ஓசையின்றித் தடை செய்தவராகவுமே சூரி காணப்படுகிறார்.

இவ்வாறு சின்னையா சூரி, பண்டைய இலக்கிய உரைநடைப் பாணியை நிலை நிறுத்துவதற்கான முயற்சிகளில் தொடர்ந்து ஈடுபட்டிருந்ததற்கு இரண்டு காரணங்கள் இருப்பதாகத் தோன்றுகின்றன.

முதலாவது, உயர்சாதிப் புலமையாளர்கள் மீது ஏற்பட்ட வெறுப்புணர்வு;

உயர்சாதிப் புலமையாளர்கள் பழமைவாதத்தைப் போற்றிச் சண்டையிடுவதைக் காட்டிலும் அவர்களது போக்கிலேயே தனது புலமையையும் ஆற்றலையுமே வெளிப்படுத்த வேண்டும் என்று சூரி விரும்பினார்.

இரண்டாவது, தமிழ் இலக்கிய மரபின் செல்வாக்கு.

தமிழ் மொழியானது ஆரம்பகாலம் முதல் இன்றையநாள் வரையில் வடமொழி எதிர்ப்பினைத் தவிர மொழிசார்ந்த அனைத்து இனங்களிலும் பண்டைய மரபு முறையிலிருந்து வழுவாமல் நிலைத்துள்ளது.

பொதுவாக, அனைத்து இந்திய மொழிகளுமே வடமொழியை மூலமாகக் கொண்டவை என்று ஏற்றுக்கொண்ட நம்பிக்கைக்கு மாறாக, திராவிடக் குடும்ப மொழிகள் எல்லாம் தனிச்சிறப்பு பெற்றவை என்று கூறி அம்மொழிகளை வேறுபடுத்திச் சீர்திருத்தும் கொள்கைகள் - விவாதங்களை 1885-86-ல் முன்வைத்த கிறித்துவப் பாதிரியார் கால்டுவெல்லைப் பின்பற்றுவோரை, சூரி எதிர்த்தார்.

அப்புதிய மொழிக் கொள்கையையும் திராவிட மக்களிடையே அதற்குள்ள ஈர்ப்பையும் சூரி அறிந்திருக்கவில்லை என்று கூறமுடியாது. எனினும் அப்போது அவர் அதை ஏற்கவில்லை. தமிழ், தெலுங்கு, வடமொழி போன்ற மொழிகளில் புலமை பெற்றிருந்தும் கூட சூரி தமது இலக்கண நூல்களில் கால்டுவெல்லின் கொள்கையைப் பின்பற்றவில்லை.

மொழி இலக்கியம் சார்ந்த எவ்வகை விவாதங்களிலும் வெளிப்படையாகப் பங்கேற்பதிலிருந்து சூரி விலகியே நின்றார் என்றே தோன்றுகிறது. அப்படிப்பட்ட விவாதங்களில் ஒன்றில் கூட அவர் பங்கேற்றதாகத் தெரியவில்லை.

உண்மையில் சூரி ஓர் அகமுக நோக்காளர்; அவர் தமது முயற்சிகளில் - நோக்கங்களில் வெற்றி பெறுவதற்காகவும், பாடத் திட்டங்களில் தமது கருத்துகள் இடம்பெற உதவும் வகையிலும் அர்பத்நாட் போன்ற அதிகாரத்திலிருந்த ஆங்கிலேயர்களை நேசித்தார்; நெருக்கமாக்கிக் கொண்டார்; பின்பற்றினார்; அவர்களுக்குச் சேவை செய்தார்.

சி.பி. பிரௌன் தொகுத்த மகாபாரத ஆதிபருவ நூல் தயாரிப்பில் மறைமுகமாக உதவி செய்தார், சூரி; வேறு ஏதும் அவரிடம் தொடர்பில்லை. அவ்வாறு சூரி சரிபார்த்ததாகப் கூறப்படும் பிரதிகளில் சூரியைப் பற்றியக் குறிப்புகள் ஏதுமில்லை. பிரௌனுக்கு ஆசிரியராக சூரி இருந்தார் என்று துவ்வூரி வேங்கடரமண சாஸ்திரி போன்ற சூரியின் ஆதரவாளர்கள் சிலர் பின்னாளில் கூறியிருப்பினும் அதுபற்றிய குறிப்போ அல்லது நன்றியுரை போன்ற எதுவும் இருதரப்பிலும் காணப்படவில்லை. சி.பி:பிரௌன் தமக்குக் கற்பித்த, உதவிபுரிந்த, விரும்பிய, ஆதரவு காட்டிய அத்தனை பேரையும் நினைவு கூர்ந்து குறிப்பிட்டுள்ளார்.

1855-ல் இந்தியாவை விட்டுத் தம் சொந்த நாட்டுக்குச் சென்ற பிரௌன் 1884 வரையிலும் வாழ்ந்திருந்தார். அவர் தமது இறுதிக்

காலம் வரையில் அகராதிகளைக் திருத்தம் செய்து கொண்டேயிருந்தார். தம்முடன் பழகிய அனைவருடனும் கடிதத் தொடர்பு கொண்டும், சில சந்தேகங்களுக்கு விளக்கம் கேட்டுப் பெற்றும் அனைவருடனும் தொடர்பு வைத்திருந்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

சின்னையா சூரி மிகவும் உறுதியான மனோவலிமை கொண்டவர். விருப்பமில்லாத எந்தப் பழக்கத்திற்கும் கொள்கைக்கும் அவர் எப்போதும் அடிமையானதில்லை. அவரது பணிகள் யாவும்.யாராலும் நெறிப்படுத்த முடியாதவை. அவர் காலத்து மூத்த அறிஞர்களின் இலக்கண நெறிமுறைகளை, கூற்றுகளைக் குறிப்பிடும் வாய்ப்பிருந்தும்கூட அவர்களின் பெயர்களை அவர் குறிப்பிடவில்லை; அவர் தமது வாழ்க்கை வரலாறு என்று எதையும் எழுதி வைக்கவில்லை; அவர் விரும்பியதை அவர் செய்தார். தமது குறிக்கோளை எட்ட யாரும் உதவமாட்டார்கள் என்னும் எண்ணத்தில் அவர் யாரைப் பற்றியும் கவலைப்பட்டதில்லை. அதன் காரணமாகவே அவர் அகராதிகள் - இலக்கண நூல்கள் தொகுப்புப் பணியில் இறங்கிய பிற ஆங்கிலேய அறிஞர்களிடம் நெருக்கமோ கடிதத்தொடர்போ கூட வைத்துக் கொள்ளவில்லை போலும்!

சூரியைச் சுற்றியிருந்த உலகம் அவர்மீது எந்தச் செல்வாக்கையும் செலுத்த முடியவில்லை. ஆனால் அவரைக் கடந்து சென்ற பரம்பரை அவர்மீது தாக்கத்தை ஏற்படுத்தியது. அவருக்குப் பின்வந்த பிற்கால மரபுவழி அறிஞர் பரம்பரையை அவர் தமது செல்வாக்குக்கு உட்படுத்தினார்! புதுமை என்பதை ஒரு துரும்பாகக் கருதினார். அதனை அவர் ஏறெடுத்தும் பார்க்கவில்லை என்றே கூறலாம்.

# 3
# படைப்புகளும் இலக்கியப் பணிகளும்

---

சின்னையா சூரியின் படைப்புகளை, இருவகையாகப் பிரிக்கலாம்.

1. உயர்நோக்குடன் எழுதப்பட்டவை
2. குறிப்பிட்ட காரணங்களுக்காக எழுதப்பட்டவை

முதல் வகையில், இலக்கணம், பேரகராதிகள், உரைநடை போன்றவை அடங்கும். இவ்வகையில் அவரது 'இந்துமதச் சட்டங்கள்' எனும் மொழிபெயர்ப்பு நூலையும் சேர்க்கலாம்.

சூரியின் இலக்கணப் படைப்புகள் தெலுங்கு, வடமொழி ஆகிய இருமொழிகளில் அமைந்துள்ளன. அவை ஒன்றோடொன்று தொடர்புடையவை என்பதால் இங்கு ஒன்றாகவே கருதப்பட்டு ஆராயப்படுகின்றன.

**ஆந்திர சப்தானுசாசனம்:**

வடமொழியில் அமைந்துள்ள இந்நூல்,

சஞ்சனம் (இடுபெயர்த் தொகுதி)
சந்தி (புணர்ச்சி)

தத்சமம் (ஓரினமாகாப் பிறமொழிச் சொற்கள்)
பிரகீர்ணம் (பிறவிதிகள்)
கிரியை (வினைச் சொல்)
தத்பவம் (ஓரினமாகும் பிறமொழிச் சொற்கள்)

என்னும் ஆறு இயல்களைக் கொண்டுள்ளது. இந்நூல் தெலுங்குமொழியின் இலக்கணச் சிறப்புகளைத் தொகுத்து வகைப்படுத்தும் முதல் முயற்சியாகக் 1844-ல் வெளியிடப்பட்டது. இதனைச் சூரியே 1840-ல் தெலுங்குச் செய்யுளில் இயற்றினார் என்றும் கூறப்படுகிறது. இவ்விரு ஆண்டுகளும் ஒன்றுக்கொன்று ஒவ்வாதனவாக உள்ளன. இவற்றின் உண்மையான காலம் தெரியவில்லை என்றாலும் இவை சூரியின் முதல் முயற்சிகள் என்பதில் ஐயமில்லை!

இந்நூலின் அளவு, சிறப்பு குறித்து எழுதியுள்ள பதிகத்தில் சூரி கீழ்க்காணுமாறு தன்னையே புகழ்ந்து எழுதியுள்ளார்:

*"திகந்த விஸ்ராந்த சிரந்தன கீர்த்தி விராஜமான*
*சம்ஸ்கிருதாதி பாஷாஷ்டக லட்சிய லட்சண ஞான*
*மகாபண்டித ஜேகீயமான,*
*நிரம்குஸ நிரர்கல ஜரீதாரா லங்கிருத*
*சம்ஸ்கிருதாந்திர பாஷானுசாஸன*
*பகுலட்சிய லட்சண கிரந்த துரீனா*
*சர்வதர்சன சங்கிரக குசுமாஞ்சலீ மகாபாஷ்ய*
*பிரவசன பாரீனா*
*சாத்தாதா ஸ்ரீவைஷ்ணவ குல கலசாம்பூதி*
*பூர்ண சந்திரேன*
*ஆங்கில ராஜாக்கிய சர்வ கலாசாலாந்திர பண்டித*
*சின்னையா சூரினா பிரணீத கீர்வான*
*பாஷாரூப்*
*ஆந்திர சப்தானுசாஸன... பரிச்செதா:"*

முதல் வருணனைத் தொடர், உலகெங்கணும் நிலைத்த புகழை அவர் பெற்றிருக்கிறார் என்று குறிப்பிடுகிறது. இது பொதுவாக எல்லோருமே பயன்படுத்துகிற ஓர் உயர்வு நவிற்சிதான்! வடமொழி உள்ளிட்ட எட்டு மொழிகளின் இலக்கண விதிகள், அவற்றின் பயன்பாடுகள் குறித்து அவர் கொண்டுள்ள பேரறிவினைச் சான்றோர் பாராட்டியுள்ளனர் என்றும் சூரி குறிப்பிடுகிறார்.

'அஷ்டபாஷா விசாரதா' என்பது பிராகிருதம் மற்றும் வடமொழி போன்ற வட்டார மொழிகள் எட்டைக் குறிக்கும் ஒரு பொதுவான பட்டப் பெயர்தான். இதைப் பொதுவாக எல்லாப் புலவர்களுமே பயன்படுத்துவதுண்டு.

மூன்றாவதாக, வடமொழியிலும் தெலுங்கு மொழியிலும் அவருக்குள்ள ஆற்றொழுக்கான சொல்லாட்சி நடையை யாராலும் தடைசெய்ய முடியாது என்கிறார், சூரி. பல்வேறு இலக்கண ஆய்வுக் கட்டுரைகளைத் தாம் எழுதியுள்ளதாகவும் சூரி கூறுகிறார். இது ஏற்கத்தக்கதாக இல்லை; அவர் கூறுவது ஐயத்திற்கிடமாயுள்ளது.

1809-ல் சூரி பிறந்தார்; 16-ஆம் வயதுவரை அதாவது 1825 வரையில் அவருக்கு எழுத்துப் பயிற்சி கூட கற்றுத்தரப்படவில்லை. எழுதப் பழகி கல்வி கற்ற பதினைந்து ஆண்டுகளுக்குள் அவர் பல பெரும் படைப்புகளைச் செய்துள்ளார் என்று கூறிக்கொள்வது வெறும் தற்புகழ்ச்சியேயன்றி வேறல்ல.

இறுதியாக அவர் கூறும், அதாவது....

சர்வதர்சன சங்கிரஹம், குசுமாஞ்சலி, மஹாபாஷ்யம் (பதஞ்சலி எழுதியது) போன்றவற்றைக் கற்பித்தார் என்பது வேண்டுமானால் உண்மையாக இருக்கலாம்.

இவையெல்லாம் சிறுபிள்ளைத்தனமான, முதிர்ச்சியற்ற தன்மையைக் காட்டும் இயல்பான கூற்றுகள்தாம்! ஆனால் அவரது பெரும் இலக்கணப் படைப்பு நம்மைச் சமாதானப் படுத்துவதைப் போல் உள்ளது. அதுவே அவரது முதன்முதலான உயர் நோக்குப் படைப்பாக உள்ளதால், அவரது மனம் எவ்வகையாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தது என்பதை அது தெள்ளிதின் புலப்படுத்துகிறது.

**பாடியாந்திர வியாகரணமு**

48 செய்யுள்களை மட்டுமே கொண்டுள்ள இந்நூல் ஒரு முற்றுப்பெறாத படைப்பாகவே உள்ளது. மேலே கண்டுள்ள வடமொழி நூலின் தெலுங்குப் பெயர்ப்புதான் இந்த நூல். 13- ஆம் நூற்றாண்டில் தெலுங்குச் செய்யுளில் எழுதப்பட்ட, கேதனாவின் ''ஆந்திர பாஷா பூஷணமு'' என்னும் நூல்தான் தெலுங்கில் உள்ள மிகப்பழைய இலக்கண நூலாகும். பாதியைக் கூட முடிக்காத நிலையில் சூரி தமது பணி பயனற்றது என எண்ணியிருக்கலாம்.

எனவே அதைத் தொடராமல் பாதியிலேயே விட்டுவிட்டார். தமது பணி, முன்னோர்களின் பணியுடன் ஒப்பிடத் தக்கதாக இல்லை என்பதை அவர் உணர்ந்திருப்பார் போலும்!

**சூத்ராந்திர வியாகரணம்**

இந்நூலும் வடமொழியில் எழுதப்பட்ட தெலுங்கு இலக்கண நூலே! இந்நூலில் சூரி, பாணினியின் பெரும்படைப்பான அஷ்டாத்யாயீயை அனைத்துக் கோணங்களிலும் முழுமையாகப் பின்பற்ற முயன்றுள்ளார்.

இதில் கீழ்க்கண்டுள்ளவாறு எட்டு இயல்கள் உள்ளன.

| | |
|---|---|
| சஞ்சனம் | (இடுபெயர்த் தொகுதி) |
| சந்தி | (எழுத்துப் புணர்ச்சி) |
| அஜந்தம் | (உயிரெழுத்து இறுதி) |
| ஆச்சிகம் | (தூய தெலுங்கு) |
| சர்வநாமம் | (மறுபெயர்) |
| காரகம் | (சொற்றொடர்) |
| சமாசம் | (தொகைமொழி) |
| தத்திதம் | (சொல்லாக்கம்) |

இவ்வெட்டு இயல்களின் வரிசைப்பாடு தாறுமாறாகவும் தெலுங்கு மொழி மேதை ஒருவரின் தொகுப்பு இது என்று சொல்வதற்குப் பொருத்தமில்லாமலும் உள்ளது.

குறிப்பாக, இணையும் பிறமொழிச் சொற்கள், இணையாத பிறமொழிச் சொற்கள், பெயர் உரிச்சொற்கள், வினையுரிச் சொற்கள் போன்ற விவாதத்துக்குரிய சிலவற்றை அவர் நீக்கியுள்ளார்.

அவரது இலக்கண விதிகளுக்கு எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காட்டலாம்:

**க ச ட த பா ஃ பருசாஃ**
**(க, ச, ட, த, ப ஆகியன வல்லொலிகள்)**

**க ஜ ட ட பா ஸஸரளாஃ**
**(க, ஜ, ட, ட, ப ஆகியவை மெல்லொலிகள்)**

**உபயே கம்பாஃ**
**(ர - ற என்பவை வருடொலி, ஆடொலி என்று இருவகையாகும்)**

ஹலஂ° பரே ஸ்திராஹ்
(பிற மெய்யொலிகள் எல்லாம் நிலைத்த ஒலிகளாம்)

இவை போன்ற விதிகளை உள்ளடக்கியதே சூரியின் ‘சூத்திராந்த வியாகரணம்’.

**சப்த லட்சண சங்கிரஹம்:**

தெலுங்கில் எழுதப்பட்டுள்ள இந்நூல் 1853-ல் வெளியிடப்பட்டது. சூரிக்குப் புரவலராக இருந்த கஜுல லட்சுமி நரசிம்ம செட்டியார் என்பவருக்கு அர்ப்பணமாக இந்நூல் ஆக்கப்பட்டுள்ளது.

''பரவஸ்து சின்னையா சூரி எழுதிய தெலுங்கு இலக்கணம்'' எனும் பெயரிலேயே சூரி இதனை வெளியிட்டுள்ளார்.

தமக்குப் பலவகையிலும் உதவிபுரிந்த நரசிம்ம செட்டியாருக்குத் தனது நன்றியுணர்வை வெளிப்படையாகவே கூறி இந்நூலை அன்னாருக்கு அர்ப்பணித்துள்ளார்.

முந்தைய நூலில் குறிப்பிட்டது போலன்றி, தன்னைப் பற்றிய புகழ்ச்சி, உயர்வு நவிற்சி போன்ற ஏதும் இந்நூலில் காணப்படாமையால் சூரியின் எண்ணங்கள் செயல்பாடுகளில் ஏற்பட்டுள்ள முதிர்ச்சியின் சான்றாக இந்நூல் அமைந்துள்ளது எனலாம். சூரியின் முந்தைய படைப்புகளையெல்லாம் விட இது மிக மிக விரிவாக உள்ளது. என்றாலும் ஐந்தே இயல்களில் 570 விதிகளை உள்ளடக்கியதாக உள்ளது.

இயல்வாரியாக உள்ள விதிகளின் எண்ணிக்கை:

| | |
|---|---|
| 1) சஞ்சனம் (இடுபெயர்த் தொகுதி) | 42 விதிகள் |
| 2) சந்தி (எழுத்துப் புணர்ச்சி) | 46 விதிகள் |
| 3) சப்தம் (சொற்றொகுதி) | 214 விதிகள் |
| 4) கிரியை (வினைச்சொல்) | 118 விதிகள் |
| 5) பிரகீர்ணம் (பிற விதிகள்) | 150 விதிகள் |

பெயர்ச்சொற்கள், மறுபெயர்ச் சொற்கள், பெயர் உரிச்சொற்கள் போன்ற அனைத்துவகைச் சொற்றொகுதிகளையும் தம்மொழி, பிறமொழி வேறுபாடின்றி சூரி ஒரே இயலில் தொகுத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நூலில் சூத்திரங்கள் முறையைக் கையாண்டுள்ளார். தெலுங்கு உரைநடையில் இலக்கண விதிகளை உருவாக்க முயற்சித்துள்ளார். இந்நூலை ஊன்றிக் கற்போர், நன்னயர் வடமொழியில் எழுதியதாகக் கூறப்படும் 'ஆந்திர சப்த *சிந்தாமணியின் மொழிபெயர்ப்புதான் என்று எளிதில் உணரமுடியும்.*

இந்நூலின் முழுப் பகுதியும் தற்போது கிடைக்கவில்லை. பிற இலக்கிய வாதிகள் மேற்கோளாகவும், குறிப்புரையாகவும் எழுதிச் சென்றுள்ளவற்றிலிருந்துதான் இந்நூலைப் பற்றி அறியமுடிகிறது.

நூலின் தொடக்கமாக வடமொழியில் சூரி எழுதியுள்ள செய்யுள் இது:

*பூர்வேசாம் லட்சய லட்சமாணி*
*விக்ரிதேஹ் வீக்ஷய பூரிசா:*
*கிரியதே பால போதாய*
*சப்த லட்சண சங்கிரஹா:*

மேற்கண்ட வரிகளில் இரு கூற்றுகள் பொருள் பொதிந்தவை.

முதலாவது, இந்நூலாசிரியர் முன்னோர்கள் பயன்படுத்திய இலக்கண விதிகளையும் நடைமுறைக் கால வழக்கிலிருந்த விதிகளையும் நன்கு விரிவாக ஆராய்ந்துள்ளார் என்று கூறுகிறது.

அடுத்த கூற்று, கசடறக் கற்று மனதில் பதிய வைத்துக்கொள்ளும் மாணாக்கரின் பயன் கருதியே இந்நூல் எழுதப்பட்டது என்று கூறுகிறது.

பற்பல தெலுங்கு இலக்கியங்கள் சூரிக்குக் கிடைத்தன. இவை யாவும் வெளிநாட்டினரால் பணியமர்த்தப்பட்ட புலமையாளர்களைக் கொண்டு கையெழுத்துப் பிரதிகளிலிருந்து திருத்தி எழுதி இறுதி வடிவம் பெற்று அச்சிட்டு வெளியிடப்பட்டவையாகும். இதனால் பனைஓலைச் சுவடிகளைத் தேடிப் பிடித்து, துருவியாய்ந்து திரட்டி, நகலெடுத்து எழுதி, திருத்தி அச்சிட்டு வெளியிடுவதற்கான காலச் செலவும் பொருட் செலவும் உடலுழைப்பும் பெருமளவுக்கு சூரிக்கு மிச்சமாகிப் போனது. இந்த நல்வாய்ப்பை சூரி முழுமையாக நன்கு பயன்படுத்திக் கொண்டுவிட்டார்.

இரண்டாவது கூற்று ஒளிவு மறைவின்றி கூறப்பட்டுள்ளது. மாணவர்களின் பயனுக்காக இலக்கண விதிகளை உருவாக்குவதே

சூரியின் பெருந்திட்டமாக இருந்தது. அப்போதெல்லாம் அறிஞர்களுக்கோ, புலவர்களுக்கோ இலக்கண ஆராய்ச்சி நூல் எதையும் எழுத வேண்டுமென்று சூரி நினைக்கவில்லை.

சூரி உருவாக்கிய இலக்கண விதிகள் யாவும் பழந்தெலுங்கில் அமைந்துள்ளன என்றாலும் அவை சுருக்கம், எளிமை, தெளிவுடன் அமைந்து கற்போரை ஊக்கப்படுத்துவதாகவும் உள்ளன.

**ஆந்திர சப்த சிந்தாமணி ஆராய்ச்சியுரை:**

வடமொழியிலுள்ள ஆந்திரசப்த சிந்தாமணிக்கு சூரி எழுதிய விளக்க ஆராய்ச்சியுரை பற்றிய குறிப்புகள் நிறையக் கிடைக்கின்றன. என்றாலும் தற்போது அவை கிடைக்காததால் அவரது ஆராய்ச்சியுரை தெலுங்கில் எழுதப்பட்டதா அல்லது வடமொழியிலமைந்ததா என்று அறிய முடியவில்லை. மேலும் அந்நூலின் அளவு, தன்மை குறித்தும் ஏதும் புலப்படவில்லை.

சூரிக்கு வழித்தோன்றல்கள் - சந்ததியினர் என்று யாரும் இல்லாததால் அவரது முயற்சிகள் யாவும் தொடர்பற்றுப் போய்விட்டன. யாராவது இருந்து அவரது பணிகளுக்கு உயிரூட்டம் தந்திருந்தால் அவரது தனிப்பட்ட ஆராய்ச்சிகள் இப்போது உள்ளவற்றை விட மேலும் தெளிவாக இருந்திருக்கும்.

**அட்சரகுச்சமு:**

இந்நூல் வெளியான ஆண்டு எதுவென்று சரியாகத் தெரியவில்லை. இது ஆரம்பப்பள்ளி மாணவர்களின் எழுத்துப் பயிற்சியைத் தரப்படுத்துவதற்காக எழுதப்பட்ட நூலாகும். எழுத்துகளின் தொடக்கநிலை, இடைநிலை வடிவங்களை இந்நூல் இங்கும், அங்குமாக ஒழுங்குப்படுத்திக் காட்டுகிறது. அக்காலத்தில் பயன்பாட்டில் இருந்துவந்த எழுத்து முறையைத் திருத்திப் பண்படுத்தும் நோக்கில் சில விதிகளைச் சூரி வகுத்துள்ளார்.

விதிகளையொட்டியே இலக்கணம் அமைய வேண்டும் என்பதுதான் சூரியின் அணுகுமுறையாகும். அதன் விளைவே இந்நூல்!

இந்நூலில் பல்வேறு வினைச்சொல் வடிவங்களைப் பட்டியலிட்டு இருபெரும் பிரிவாக்கினார். அவை...

1) வடமொழியிலிருந்து பெறப்பட்டு ஒன்றாமல் நிற்கும் வினைச்சொற்கள்.

2) தெலுங்கு மொழி வினைச்சொற்கள் (தேசிய அல்லது விக்ருதி வினைச்சொற்கள்)

வடமொழி வினைச்சொற்களை வகைப்படுத்திட சூரி கையாண்டுள்ள சொல்லாட்சிகள் யாவும் மிக நுட்பமானவை யாகவும், பெரும்பான்மை வடமொழியினதாகவும் உள்ளன. எடுத்துக்காட்டாக, பிறமொழி வினைச்சொற்கள் எனுந் தலைப்பில் இடம் பெற்றுள்ள

இந்தம்ஜந்தம்
மதுபந்தம்
இன்வந்தம்
மத்வர்த்தீயம்
ஆல்வந்தம்
பாவப்பிரத்யயாந்தம்
தவ்யாந்தம்
அன்யாந்தம்
துஜந்தம்
யுதந்தம்

போன்றவை இத்தகையன.

ஒரு தமிழன் சொந்த மொழிச் சொல்லாட்சியை உருவாக்குவதைப் போல, தமது தெலுங்கு மொழிக்குச் சிலவற்றை உருவாக்கும் போக்கு எதுவும் சூரியிடம் இல்லை; அதைப் பற்றியெல்லாம் அவர் அக்கறை எடுத்துக் கொண்டதாகவும் தெரியவில்லை.

மேம்படுத்தப்பட்ட பிறமொழி நுட்பச் சொற்களை ஒட்டுமொத்தமாகக் கடன் வாங்கியதன் மூலம், நூலின் நோக்கம் நிறைவேறாமல் போய்விட்டது.

தெலுங்குமொழியில் உள்ள இறந்தகால, நிகழ்கால, எதிர்கால வினைச்சொல் வடிவங்களைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். கடினச் சொற்களைச் சரியாக உச்சரிப்பதற்கான சில யோசனைகளையும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

இந்த நூல் அவ்வளவாக மக்களின் வரவேற்பைப் பெறவில்லை. வடமொழியில் அமைந்துள்ள "சிக்ஷா" வுக்கு இணையான ஒன்றை சூரி உருவாக்க திட்டமிட்டிருந்தார் என்பதை இந்நூலின் மூலம் நாம் அறியமுடிகிறது.

**பால வியாகரணமு:**

சின்னையா சூரி தமது மாபெரும் படைப்பான 'பால வியாகரணமு' என்னும் மரபிலக்கண நூலை 1858-ல் வெளியிட்டார். மரபிலக்கிய அறிஞர்களால் ஏற்கத்தக்க தனிப்பெரும் ஒரே இலக்கண நூலாக அது அமைந்துவிட்டது. சூரியின் அனுபவங்கள், ஆராய்ச்சிகள், திருத்தங்கள், மீட்டுருவாக்கங்கள், அவரது முன்னோடிகளின் விதிகளில் செய்யப்பட்ட மாற்றங்கள் போன்ற அனைத்தும் ஒருங்கிணைந்த பெரும்படைப்பாக முளைத்தெழுந்த நூல்தான் இது!

13-ஆம் நூற்றாண்டில் தோன்றிய கேதனாவின் ஆந்திர பாஷா பூஷணமு, 1656-ல் வெளிவந்த அப்பகவியின் 'அப்பகவியமு' ஆகிய இரண்டு நூல்கள் மட்டுமே இதற்குமுன் தெலுங்கில் எழுதப்பட்டிருந்தன. முதலாவது எளிமையான விளக்கங்களுடன் செய்யுள் வடிவிலிருந்தது. இரண்டாவது நூல் உரைநடை, செய்யுள் இரண்டிலும் கலந்து அமைந்திருந்தது. அதிலும் செய்யுள் பகுதி பண்டையச் செவ்வியல் நடையில் அமைந்திருக்க, உரைநடைப் பகுதியானது அக்காலத்திய சாதாரண நடையில் இருந்தது. எனவே அது ஒரு முழுமையான, சரியான இலக்கண நூலாக அமையவில்லை.

இலக்கணப் பகுதியை விடச் செய்யுள் இயலுக்கே அப்பகவி சிறப்பிடம் கொடுத்து, விரிவாக பல விளக்கங்களைத் தந்துள்ளார். இலக்கணப் பகுதியின் விதிகளை ஆந்திர சப்த சிந்தாமணியிலிருந்து பெற்று வடமொழியில் இயற்றியுள்ளார். எனினும் பண்டைய தெலுங்கு வடிவத்திற்கும் தற்காலத்திய தெலுங்கு வடிவத்திற்கும் சரிசமமான முக்கியத்துவம் கொடுத்த இராவிபாதி குருமூர்த்தியைப் போலன்றி, அப்பகவியின் பழமை போற்றும் முயற்சியைப் போல் சூரியும் திருப்தியடைந்துள்ளார்.

பாலவியாகரணத்தின் முன்னுரையில் சூரி இரண்டு செய்யுள்களைத் தெலுங்கில் படைத்துள்ளார்.

முதல் செய்யுளில்,

இந்நூல் தாம் முன்னர் இயற்றிய இலக்கண விதிகளின் பாதியளவு மொழிபெயர்ப்பு என்றும், மொழி கற்கும் மாணவர்கள் எளிதே புரிந்து கொண்டு கற்கவும் மனனம் செய்யவும் ஏற்றவாறு எளிமையாக ஆக்கப்பட்டுள்ளது என்றும் கூறுகிறார்.

இரண்டாவது செய்யுளில்,

தெலுங்கு இலக்கணத்தை அறிய விரும்புவோர்க்கு அதன் மூலத்தையறிய இந்நூல் பெரிதும் உதவும் என்று கூறியுள்ளார்.

ஆனால் சூரி, எந்த மூல நூலில் இருந்து இந்நூலைத் தெலுங்கில் பெயர்த்தார் என்பதைக் குறிப்பிடவில்லை. அதை ஒரு புதிராகவே விட்டுச் சென்றுள்ளார் சூரி. அது எது என்று குறிப்பிட்டுக் கூறவோ, மேற்கோளாகக் காட்டவோ இல்லை. ஆயினும் பட்டோஜி தீட்சிதர் தமது 'சித்தாந்த கௌமுதி'யில் கையாண்ட விதிமுறைகளையே சூரியும் கையாண்டு விதிகளைத் தெலுங்கு உரைநடையில் வகுத்துள்ளார்.

எனினும், இந்நூல் தெலுங்கு மொழியில் தெலுங்கு மக்களுக்காகவே மிகமிக விரிவான முறையில் உருவாக்கப்பட்ட மரபிலக்கண நூலாகும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் 10 இயல்களாக அமைந்து, கீழ்க்காணுமாறு 465 விதிகளைக் கொண்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1. சஞ்சனம் | (இடுபெயர்த் தொகுதி) | 23 விதிகள் |
| 2. சந்தி | (எழுத்துப் புணர்ச்சி) | 55 விதிகள் |
| 3. தத்சமம் | (ஓரினமாகாப் பிறமொழிச் சொற்கள்) | 87 விதிகள் |
| 4. ஆச்சிகம் | (சொந்தமொழிச் சொற்றொகுதி) | 38 விதிகள் |
| 5. காரகம் | (சொற்றொடர்) | 37 விதிகள் |
| 6. சமாசம் | (தொகைமொழி) | 26 விதிகள் |
| 7. தத்திதம் | (சொல் மரபு விளக்கம்) | 28 விதிகள் |
| 8. கிரியை | (வினைச்சொல் | 124 விதிகள் |
| 9. கிரிதந்தம் | (சொல்லாக்கம்) | 22 விதிகள் |
| 10. பிரகீர்ணம் | (பிறவிதிகள்) | 25 விதிகள் |
| | மொத்தம் | 465 விதிகள் |

சூரியின் இந்த இலக்கண நூலை மதிப்பீடு செய்வதற்குமுன் 19-ஆம் நூற்றாண்டில் மிகவும் மதிக்கப்பெற்று புகழ்பெற்ற வேறு நான்கு இலக்கண நூல்களைப் பற்றி முதலில் அறிவது நலம் பயக்கும்.

**வேதம் பட்டாபிராம சாஸ்திரி எழுதிய பட்டாபிராம பண்டிதீயாமு** அல்லது பாடியாந்திர வியாகரணமு என்னும் நூல் 1816-ல் வெளிவந்தது. இது ஆந்திர சப்த சிந்தாமணி என்னும் வடமொழி நூலின் விளக்கவுரையாக கருதப்பட்ட நூலாகும்.

**குருமூர்த்தி சாஸ்திரியின் தெலுங்கு வியாகரணமு** எனும் நூல் 1836-ல் வெளிவந்து, 1852-ல் இரண்டாம் பதிப்பைக் கண்டது.

**உதயகிரி சேஷையாவின் வியாகரணமு** 1856-ல் வெளிவந்து 1887-ல் பத்து, பனிரெண்டு பதிப்புகளைப் பெற்றது.

இவையாவும் சூரியால் வகுப்புகளில் கற்பிக்கப்பட்ட நூல்கள்தாம்!

சூரியின் முன்னோடிகள் யாரும், வடமொழியில் உள்ள சூத்திரங்கள் முறையையும் சொல்லாட்சிகளையும் முழுமையாகத் தழுவி தெலுங்கு இலக்கண விதிகளை வகுத்திட சூரியைப்போன்று கடுமையான முயற்சிகள் எதையும் மேற்கொள்ளவில்லை. சூரி தமது அறிவு, ஆற்றல், நேரம் முழுவதையும் தெலுங்கு மொழியமைப்பினை, ஒரு புதிய வடமொழிச் சட்டகத்துக்குள் பொருத்துவதிலேயே செலவிட்டார். அதாவது ஆரிய உடலில் திராவிட ஆன்மாவைப் புகுத்தியவர், சூரி. இந்த முயற்சியின் மூலம் சூரி மரபிலக்கியவாதிகளைத் திருப்திப்படுத்தினார்; குறிப்பாக உயர்சாதிப் புலவர்களின் கவனத்துக்கும், அளவற்ற புகழ்ச்சிக்கும் ஆளானார்.

சூரியின் புரவலராகத் திகழ்ந்த கஜுல லட்சுமி நரசிம்மம் (1806-68) என்பவர் புலமை மிக்கவரும் கூட! அவர், பச்சையப்பன் கல்லூரியில் பணியாற்றிய விஞ்சமுரி கிருஷ்ணமாச்சார்யலு எனும் பண்டிதரை பாலவியாகரணமு நூலுக்கு உடனே ஆராய்ச்சியுரை ஒன்றை எழுதித் தருமாறு பணித்தார். ஏனெனில் ஆராய்ச்சியுரைதான் மூல நூலின் பெருமையைக் கூட்டி அதன் செல்வாக்கை உயர்த்த முடியும்! ஆனால், அப்பண்டிதர் அவ்வாராய்ச்சியைத் தொடங்கி, அதைப் பாதியிலேயே விட்டுவிட்டு 15.10.1866-ல் காலமாகிவிட்டார். அப்போது சூரியும் இல்லை; சூரி நான்காண்டுகளுக்கு முன்னமேயே காலமாகி யிருந்தார். அந்த ஆராய்ச்சியுரையின் பகுதிகள் கூட எதுவும் தற்போது கிடைத்தில.

1858-ல் முதல் பதிப்பைக் கண்ட 'பாலவியாகரணமு' நூல் 1900-க்குள் 17 பதிப்புகளைக் கண்டு நல்ல வரவேற்பைப் பெற்றிருந்தது. ஒருகண்டி சோமசேகர கவி (1818-1903) என்பவர் சூரியின் இந்த இலக்கண நூலை அந்த நூற்றாண்டு முடிவதற்குள்ளாகவே செய்யுள் வடிவில் மாற்றியமைத்தார். அந்த நேரத்தில் அரசும், மொழிப் பாடநூல் கழகமும் கல்வித் துறையின்

எல்லா வகுப்பு நிலைகளிலும் அந்நூலைக் கட்டாயப் பாடமாக்கியிருந்தன. இதற்குமுன் மேற்பட்டப் படிப்பு வரை பாடமாக இருந்த அனைத்து இலக்கண நூல்களையும் புறந்தள்ளிவிட்டு இந்நூலே பாடநூலாக அரங்கேறியது.

இவ்விலக்கண நூலை சின்னையா சூரி மாணவர்களுக்காகவே இயற்றினார் என்றாலும், அதுவே தெலுங்கு மொழிக்கு ஈடிணையற்ற, எவரும் மறுக்கவொண்ணாத அளவுக்கு ஒரு பெரும் இலக்கண ஆய்வு நூலாக அமைந்துவிட்டது. தெலுங்கு மொழிப் புலமையாளர்கள் எல்லோரும் சூரியின் புதிய இலக்கண விதிகளுக்கேற்பச் பழைய நூல்களின் சொல்லாட்சிகளைத் திருத்தி வெளியிடுவதில் படுவேகம் காட்டினர். சூரியின் இலக்கண விதிகளுக்கு ஒத்திராத எந்த நூலும், அது நூறாண்டு காலப் பழைமை வாய்ந்ததாயினும் கூட ஏற்கப்படாமல், விலக்கப்படும் நிலைமை உருவானது. சூரியின் இலக்கண விதிகளையொட்டி புதிய வகைப் பாடநூல் திறனாய்வு முறைகூட நடைமுறைப் படுத்தப்பட்டது. மரபு வழி இலக்கணத்தில் உச்சியை நோக்கிப் பயணித்த அவரது கடின முயற்சிகள் யாவும், அவரது மறைவுக்குப் பின்னரே புழக்கத்துக்கு வந்ததாயினும் அவை முழு வெற்றியைப் பெற்றுவிட்டன என்பதில் ஐயமில்லை.

இருபதாம் நூற்றாண்டின் முதல் பத்து ஆண்டுகளில் சூரியின் பாலவியாகரணமு எனும் இந்த இலக்கண நூல் பற்றிய ஆராய்ச்சியுரைகள் தொடர்ந்து வெளிவந்தன. சுங்கரி ரெங்கையா என்பவர் 'பாலவியாகரண குப்தார்த்த பிரகாசிகா' எனும் பெயரில் 176 பக்கங்களில் தமது ஆராய்ச்சியுரையை எழுதி வெளியிட்டார். இவர் கல்லூரி வேங்கடராம சாஸ்திரியின் மாணவராக இருந்து, அவரது விளக்கவுரை, குறிப்புரைகளையெல்லாம் எடுத்துவந்து, அவற்றைத் தமது படைப்புகளாக வெளியிட்டுவிட்டார். அதன் காரணமாக விரைவில் தமது ஆசிரியருடன் ஒரு வழக்கையே சந்திக்க நேர்ந்தது. எனினும் வழக்கு முடியுமுன்பே ரெங்கையா காலமாகிவிட்டதால், அந்நூலின் எழுத்துப் பிரதிகள் யாவும் மூல ஆசிரியரிடமே ஒப்படைக்கப்பட்டன. அந்நூலும் நிறைவுபெறாமல் நின்றுபோனது.

நம்பிக்கைத் துரோகம் காரணமாக சீற்றமுற்ற வேங்கடராம சாஸ்திரி தமது நூலை ''குப்தார்த்த பிரகாசிகா'' எனும் பெயரில் 1915-ல் வெளியிட்டார். அது இருவகைத் தனி நிகழ்ச்சிகளுக்குக் காரணமாக அமைந்துவிட்டது. சூரியின் இலக்கணத்தை

ஒத்துக்கொண்டு அதனைப் பாராட்டியும் வந்த வேங்கடராம சாஸ்திரிக்கு, பிராமணரல்லாத தனது மாணவன் ஒருவன் தனது உரையினை அவனது பெயரில் வெளியிடத் தொடங்கியதும் மிகுந்த கோபம் ஏற்பட்டது. இந்தக் கோபத்தை பிராமணரல்லாத சூரியின் நூல் மீதும் காட்டினார். சூரி எழுதிய நூலின் ஒவ்வொரு சீர், அசை விடாமல் பழிக்கத் தொடங்கினார். வடநூல் இலக்கணத்தைப் பழுதறக் கற்றிருந்த இவர் சூரியின் வடமொழி இலக்கண அறிவு மிகவும் சாதாரணமானது என்று நிறுவப் பெருமுயற்சி செய்தார். சாஸ்திரியின் இத்தகைய மனமாற்றத்தோடு, பிறிதோர் நிகழ்ச்சியும் அந்நாட்களில் பெரும் பரபரப்பை விளைவித்தது.

ஒரு கடையில் சாமான்கள் வாங்கிக் கொண்டிருந்த சாஸ்திரி, அவை மடிக்கப்பட்டிருந்த தாள்களைக் கண்ணுற்றார். அவை வடமொழியில் எழுதப்பட்டிருந்த தெலுங்கு இலக்கணக் கைப்பிரதிகளாக இருந்ததைப் பார்த்து வியந்து எல்லாப் பிரதிகளையும் கேட்டுப் பெற்றார். அந்த இலக்கணத்தைப் படித்துத் திருத்தி, தனது ஆராய்ச்சி நூலின் இணைப்பாக 'சிஷ்து கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியின் (1827 - 27.3.1891) ஹரிகாரிகாவலி' எனும் பெயரில் வெளியிட்டார். வெளி யிட்டதோடு மட்டுமின்றி இதுதான் மூலநூல் என்றும் சூரியின் 'பாலவியாகரணம்' சொல்லுக்குச் சொல்லாக அமைந்த இந்நூலின் மொழிபெயர்ப்பேயன்றி வேறல்ல என்றும் குறிப்பிட்டார். இது ஒரு பெரும் சர்ச்சையாகி பன்னிரண்டு ஆண்டுகள் வரை நீடித்தது. இது குறித்து அடுத்த இயலில் மேலும் காண்போம்.

தூசி ராமமூர்த்தி சாஸ்திரி என்பவர் தமது, ஆராய்ச்சியுரையை ''சாரஸ்ய சர்வஸ்வ பீதிகை'' அல்லது 'கிராந்தி காந்திர கற்பகமு' எனும் பெயரில் 1937-ல் வெளியிட்டார். அதில் சூரியின் நூலம் பகுஜனபள்ளி சீத்தாராமாச் சார்யலுவின் 'பிரௌத வியாகரணம்' எனும் நூலும் ஒப்பாய்வு செய்யப்பட்டு சில இடங்களில் ஒற்றுமை வேற்றுமைகளும் அலசி ஆராயப்பட்டிருந்தன. இங்கு குறிப்பிடப்பட்டுள்ள இன்னொரு நூல் எச்ச விதிகளைக் கொண்டிருந்தது. இதன் ஆசிரியர் சூரியின் மாணவராக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

புலுசு வேங்கடரமணைய்யா எழுதிய 'லகுடிகா' 1947-லும், 'சூத்ரார்த்தலு' 1949-லும் வெளிவந்தன. சூரியின் நூலைப் பின்பற்றி வஜ்ஜல சின்ன சீத்தாராமஸ்வாமி சாஸ்திரி எழுதிய விரிவான இருபெரும் ஆராய்ச்சியுரைகளான 'ஆந்திரவியாகரண

சம்ஹிதா சர்வஸ்வமு' 1951-லும், 'பாலவியாகரணோத்தியோதமு' 1960-லும் வெளிவந்தன.

மேலும் பல ஆராய்ச்சியுரைகளும் விளக்கவுரைகளும் பாலவியாகரண நூலுக்கு எழுந்தனவாயினும் அவற்றையெல்லாம் கணக்கில் கொள்ள இயலவில்லை.

கிடுகு வேங்கடராமமூர்த்தி (1862-1940) என்பவர் மொழியைப் பயில இலக்கணம் சார்ந்த அணுகுமுறையை எதிர்த்து ஓர் உணர்வுபூர்வமான இயக்கத்தைத் தொடங்கிய காலம் வரையில், தெலுங்கு இலக்கியம், மொழி, இலக்கணம் அனைத்திலும் பரவியிருந்த சூரியின் மேலாதிக்கம் யாராலும் எதிர்த்துக் கேள்வி கேட்கப்படமுடியாதவொன்றாகவே தொடர்ந்து கொண்டிருந்தது. இது குறித்து அடுத்த இயலில் காண்போம்.

இந்நூலுக்குரிய சட்டப்படி பதிப்புரிமைக்காலம் முடிந்தபின், பாலவியாகரணமு நூல் இந்நாள் வரையில் எத்தனைப் பதிப்புகளைக் கண்டது என்பதை யாரும் கணக்கிட இயலாது. சஞ்சனம், பரிஷ்காரம், பரிபாஷை, நியமம், நிபந்தனை போன்றவற்றை அஷ்டாத்யாயீயிலிருந்து எடுத்துப் பெருமளவில் தமது இலக்கண நூலில் சூரி பயன்படுத்தியுள்ளார். வாமனரின் காசிகாவிருத்தியைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். சில இடங்களில் திரிவிக்கிரமனின் 'பிராகிருத சப்தானுசாஸனம்' எனும் நூலிலிருந்து சிலவற்றை இரவலாகப் பெற்றுப் பயன்படுத்தியுள்ளார்.

சூரியின் இலக்கணச் சூத்திரங்கள் யாவும் மாணவர்கள் எளிதில் மனப்பாடம் செய்யத்தக்க வகையில் சுருக்கமாகவும், கச்சிதமாகவும் அமைந்துள்ளன. பொருளற்ற, பொருத்தமில்லாத வெற்றுச் சொற்களையும், திரும்பத் திரும்ப வரும் சொற்களையும் அவர் தவிர்த்துள்ளார். சிற்சில இடங்களில் பண்டைய இலக்கியங் களிலிருந்து சான்றுகளையும், எடுத்துக்காட்டுகளையும் சொல்லாட்சிகளையும் தந்துள்ளார். நடப்பு வழக்கிலிருந்த ஒலியன்களுக்கு உயிர்கொடுத்தும் மிகச் சிறிய வேறுபாட்டுப் பண்பொலிகள் இல்லாத இடங்களில் அவற்றுக்கு மீட்டுயிர் கொடுத்தும் தமது நூலைப் படைத்துள்ளார் சூரி.

**விபக்தி போதினி:**

1860-ல், சூரி இறப்பதற்கு இரண்டாண்டுகட்கு முன்பாகவும், அவரது கடைசி இலக்கண நூலாகவும் வெளிவந்த நூல் விபக்தி

போதினி எனலாம். இது வடமொழியிலுள்ள சப்தமஞ்சரியை ஒத்ததாகும்.

இதில் சூரி, சொந்த மொழிச் சொற்களிலிருந்தும், பிற மொழிச் சொற்களிலிருந்தும் ஏழுவகை வேற்றுமைகளையும் உருவாக்கி யுள்ளார். இந்நூல் வெளிவந்தபோது சூரி புகழின் உச்சாணிக் கொம்பிலிருந்த காரணத்தால் இது நீண்ட காலத்திற்கு பள்ளிகளில் பாடநூலாக இடம் பெற்றிருந்தது.

**ஆந்திர தாதுமாலா:**

வவில்ல இராமசாமி சாஸ்துருலு அண்டு சன்ஸ் என்னும் புகழ்பெற்ற சென்னைப் பதிப்பகம் ஒன்று ஆந்திர தாது மாலாவைச் சூரியின் நூலாக 1951-ல் வெளியிட்டது. ஆனால் அது சூரியின் படைப்பல்ல. அது வெளியானபின் எப்.டபுள்யூ.எல்லீஸ் என்பார்க்குப் பயன்தரும் வகையில் 1820-ல் வேதம் பட்டாபிராம சாஸ்திரி அந்நூலை எழுதினார் என்று தெரியவந்தது. இம்மாபெரும் தவறு, சூரியின் புகழ் அந்தக் காலத்தில் எந்த அளவுக்குக் கொடிகட்டிப் பறந்துகொண்டிருந்தது என்பதைப் பறைசாற்றுவதாக அமைந்துள்ளது.

தெலுங்கு மொழி இலக்கணத்தில் ஆதாரச் சான்றுகளுடன் ஏதேனும் எழுதப்பட்டால், அது..... சின்னையா சூரியின் படைப்பாகத்தான் இருக்கமுடியும் என்றும் வேறு யாராலும் அவ்வாறு எழுதமுடியாது என்றும் ஆழமான நம்பிக்கை வேரூன்றியிருந்த காலமாக அது இருந்தது.

**அகராதி நூல்கள்:**

தெலுங்கு - தெலுங்கு பொருள்விளக்கமாக அமைந்த மொழியகராதித் தொகுப்பு ஒன்று சின்னையா சூரியின் பெயரில் வெளியிடப்படாமல் உள்ளது. இக்களஞ்சியத்துக்கு ஆசிரியர் எந்தப் பெயரையும் வைக்கவில்லை. தெலுங்கு அகாதெமியினர் (ஆந்திர சாகித்ய பரிஷத்) இதன் கையெழுத்துப் பிரதிகளைப் பெற்று சி.நி. (சின்னையா சூரி நிகண்டு) என்று குறிப்பிட்டுள்ளனர். காகிநாடாவில் உள்ள அகாதெமி அலுவலகத்தில் இது பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளதெனினும் என்ன காரணத்தாலோ, அங்குள்ளோர் இதைப் பதிப்பித்து வெளியிட அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை.

அவர்களின் கூற்றுப்படி இந்நூல் ஏழு தொகுதிகளாக உள்ளது. முதல் தொகுதி முற்றிலுமாக சூரியின் கையெழுத்தில்

அமைந்துள்ளது. ஒரு சில வடமொழிச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. இந்நூல் தொகுக்கப்படட காலம் எதுவென்று திட்டவட்டமாகத் தெரியவில்லை. இக்களஞ்சியத்தில் எத்தனைச் சொற்கள் உள்ளன என்றும் குறிப்பிடப்படவில்லை.

அகாதெமி 8 தொகுதிகளாக வெளியிட்ட ''சூரியாந்திர நிகண்டு'' எனும் நூலில் சூரியின் சொற் களஞ்சியத்திலிருந்து பலவற்றை மேற்கோள்களாக அங்குமிங்கும் சுட்டிக்காட்டியுள்ளது.

பதினைந்து பழம்பெரும் இலக்கியங்களிலிருந்து மட்டுமே மேற்கோள் வரிகளைச் சூரி தொகுத்துள்ளார் என்று தெரிகிறது. இதிலுள்ள சொற்கள் யாவும் அகரவரிசையில் அமைந்துள்ளன. சொல்லாட்சிகளின் பயன்பாட்டையும் கூறியுள்ளார். இதற்குமுன் மசூலிப்பட்டினத்தைச் சேர்ந்த மாமிடி வெங்கையா என்பவர் அகரவரிசையில் முறைப்படுத்தித் தொகுத்து, சூரியின் நிகண்டுக்கு முன்னமேயே 1849-ல் வெளியிடப்பட்ட தெலுங்கு மொழியகராதி ஒன்று இருந்தது. ஆயினும் சூரியே முதலில் தனது அகராதியினைத் தொகுத்து, அதனுள் வரும் வழக்காறுகளின் அடிப்படையில் அவரது பால வியாகாரணத்தில் இலக்கண விதிகளை வகுத்துள்ளார் என்ற கருத்தும் நிலவுகிறது.

சூரியின் மாணாக்கராயிருந்த பகுஜனபள்ளி சீத்தாராமாச் சார்யலு என்பவர் 25 ஆண்டுகள் அரும்பாடுபட்டுத் தொகுத்து 1885-ல் வெளியிட்டதாகக் கூறப்படும் 'சப்தரத்னாகரமு' எனும் அகராதி, அவரது ஆசிரியரின் கையெழுத்துப் பிரதிகளிலிருந்து கையாடப் பட்டிருக்கக்கூடும் என்றொரு வதந்தி அறிஞர்கள் மத்தியில் உலவுகிறது. இது உண்மையெனில் 1862-ஆம் ஆண்டு சூரியின் கடைசி நாட்களில் அக்கையெழுத்துப் பிரதிகள் சீத்தாராமாச் சார்யலுவின் கைகளில் கிடைத்திருக்க வேண்டும். இவ்வதந்தியை உறுதிப்படுத்தும் சான்றுகள் ஏதுமில்லை. ஆனால், இதை மறுக்கும் சான்றுகள் உள்ளன.

சுத்தமான தெலுங்குச் சொற்களைக் கொண்ட எந்தவொரு தெலுங்கு மொழியகராதியிலும் 4000 சொற்களுக்கு மேல் இடம்பெற்றதில்லை. சூரியின் சொற்களஞ்சியம் பெரும்பான்மையாக தாய்மொழிச் சொற்களையும், ஒரு சில வடமொழிச் சொற்களையும் கொண்டிருந்தாலும் கூட அதன் அளவு, 1848-ல் ரெங்கநாயக்கலு சிரேஷ்டி என்பவர் 40,000 சொற்களுடன் 811 பக்கங்களில் வெளியிட்டதைவிட மிகவும் சிறியதாகவே இருந்திருக்கவேண்டும்.

சூரி தமது சொற்களஞ்சியத்தில் பயன்படுத்தியுள்ள ஆதார நூல்கள் 15 பழைய இலக்கியங்களே! ஆனால் 'சப்த ரத்னாகரமு' எனும் நூலில் 104 நூல்களிலிருந்து சொல்லாட்சிகள் மேற்கோளாகத் தரப்பட்டுள்ளன. ஸ்ரீராமாச்சார்யலுவின் அகராதியானது 1131 பக்கங்களில் 60,000 சொற்களுடன் அமைந்துள்ளது. சூரியின் மாணவராக இருந்த காரணத்தால் சொற்களைச் சேகரிப்பது குறித்த விவரங்களையும் அவற்றின் விரிவெல்லைகளையும் அவர் அறிந்து கொண்டிருந்திருக்கலாம். ஆனாலும் சின்னையா சூரியின் நிகண்டு, அதனையொத்த படைப்பாக அமைந்துள்ள அவருடைய மாணவரின் அகராதியை விடப் பெரியதாகிவிட முடியாதுதான்!

இது குறித்த வதந்தி சூரியின் ஆதரவாளர்களால் வேண்டுமென்றே பரப்பப்பட்டதாகத் தெரிகிறது. காரணம், சூரியின் இலக்கண நூலான பாலவியாகரணத்தை மிஞ்சுகின்ற வகையில் அவரது மாணவரான சீத்தாராமாச்சார்யலு 'பிரௌதவியாகரணமு' என்னும் சிறந்த இலக்கண நூலை வெளியிட்டதுதான்! இவ்விரு இலக்கண நூல்களிலும் இரு ஆசிரியர்களின் அணுகுமுறைகளும் வெவ்வேறானவை என்பது குறிப்பிடத்தக்கது. சூரி, ஆரம்ப கால எழுத்தாளர்களின் இலக்கியத் தன்மையை விட அவர்களின் இலக்கணக் கூற்றுகளுக்கே பெரும் முக்கியத்துவம் தந்தார். ஆனால் சீத்தாராமாச்சார்யலு சூரிக்கு நேர்மாறான வகையைத் தேர்ந்தெடுத்திருந்தார். சீத்தாராமாச்சார்யலுவின் அகராதிக்கு சூரியின் நூலும் ஓர் ஆதார நூலாக இருந்திருக்கலாம் அல்லது அவரது ஆசிரியரின் திறமையினை மற்றவர்களுடையதைவிட அதிகமாக நம்பியிருக்கலாம்.

இலக்கிய இதழான சுஜனரஞ்சனியின் 1865 டிசம்பர் மாத இதழில், வடமொழியில் அமைந்த விஸ்வகோஷம் என்னும் நூலின் விளக்கவுரையை சின்னையா சூரி தெலுங்கில் எழுதினார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கூற்று பகுஜனபள்ளி சீத்தாராமாச் சார்யலு, கருமாஞ்சி சுப்பராயலு நாயுடு, நிஞ்சமூரி கிருஷ்ணமாச்சார்யலு ஆகியோராலும், சூரியின் மாணவர்களாலும் அவருக்குப் பின் பணிபுரிந்தவர்களாலும் உறுதி செய்யப்பட்டுள்ளது. ஆனால் தற்போது அவ்வாராய்ச்சியுரையின் ஒருவரி கூடக் கிடைக்கவில்லை. ஒரு சிறந்த இலக்கண ஆசிரியரான சூரி, சிறந்த சொற்களஞ்சிய ஆசிரியராகவும் வேண்டுமென்று விரும்பியிருக்கலாம் என்று தோன்றுகிறது. சூரி மறைந்து மூன்றாண்டுகள் கழித்து சுஜனரஞ்சனியில் இக்கூற்று வெளியாகியது.

**உரைநடை நூல்கள்:**

சூரியின் புகழ்பெற்ற நூல்களில் ஒன்றான 'நீதிசந்திரிகா' எனும் உரைநடை நூலை, அவர் தமது சொந்த அச்சகமான 'வாணிதர்ப்பண முத்ராட்சரசாலா'வில் அச்சிட்டு 1853-ல் வெளியிட்டார். இதன்மூலம், சூரி அக்கால கட்டத்தில் பெரும் செல்வச் செழிப்புடன் இருந்தார் என்பதை அறியமுடிகிறது.

அக்காலத்தில் சிம்மகிரி நரஹரி வசனமுலு (கி.பி. 1300) வுக்கும் 1770-ல் எழுதப்பட்டு 1834-ல் வெளியானதாகக் கூறப்படும் இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரியின் 'பஞ்சதந்திர கதலு' வுக்கும் இடைப்பட்ட காலத்தில் மிகச்சில உரைநடை நூல்களே இருந்தன. பஞ்ச தந்திர கதலு 1860-க்குள் நான்கு பதிப்புகளைக் கண்டு பள்ளிகளில் பாட நூலாகவும் இடம் பெற்றது. சூரியே அதனைக் கற்பிக்கும் வாய்ப்பையும் பெற்றிருந்தார்.

அப்போதைய தெலுங்கு உரைநடை நூலாசிரியர்கள் கி.பி.1600 முதல் விஸ்வநாத் ஸ்தானாபதியின் 'ராயவாசகமு' போன்ற உரைநடை நூல்களில் பின்பற்றப்பட்டு வந்த மரபுவழி இலக்கண முறைமையைப் பின்பற்றாமல் விலகிச் சென்றனர். குருமூர்த்தி சாஸ்திரி போன்றோர் பின்பற்றிய புதுமை நடை சூரிக்குப் பிடித்ததாக இல்லை. எனவே, அதே கதையைத் தமது சொந்த நடையில் எழுதி வெளியிடத் துணிந்தார். அவ்விருவருக்குமே மூலக்கதை நாராயண பண்டிதரின் ஹிதோபதேசமும், விஷ்ணு சர்மாவின் பஞ்சதந்திரமும் தாம்! அந்தக் காலகட்டத்தில் இந்தியா எங்கணும் இருந்த பாடநூற் கழகத்தினர்க்கு கதைகளை உரைநடையில் வெளியிட்டு, பாட நூல்களாக வழங்க வேண்டிய அவசர அவசியம் இருந்தது.

சின்னையா சூரி இரு கதைகளையும் ஒன்றாக்கி,

மித்ரலாபமு (நட்பாதல்)
மித்ரபேதமு (பிரிவு)
சந்தி (உடன்பாடு)
விக்ரஹமு (சண்டை)

என்று நான்கு பிரிவுகளாக எழுதத் திட்டமிட்டார். ஆனால் முதலிரண்டு பகுதிகளை மட்டுமே எழுதியவர், மற்ற இரு பகுதிகளை எழுதுவதில் அக்கறை காட்டவில்லை. இதன் தொடக்கச் செய்யுளில், அவரது கதைகளைப் படிப்பதன் மூலம் ஒருவர் மொழியறிவும் அரசியல் தந்திரங்களில் தேர்ச்சியும் பெறமுடியும் என்று கூறியுள்ளார். அது இலக்கிய வளத்துடன் அமைந்துள்ளதெனினும், அதன் மொழிப்பாங்கு ஈடிணையற்ற

தாகவும், நடையில் பிழைகாண முடியாததாகவும் உள்ளது. உரையாடலில் சிறுசிறு வாசகங்கள் காணப்படுகின்றன. ஆனால் கதை கூறும் முறையில் சூரி பட்டபாணரின் காதம்பரியைப் பின்பற்றியுள்ளார். முதன்மைக் கருத்துக்குள் தோன்றும் ஒவ்வொரு கதையிலும் தவறாமல் ஒரு நீதி இடம்பெற வேண்டும் என்பதில் சூரி மிகுந்த கவனமாக இருந்தார். இவ்வாறு, மொத்தத்தில் கரதகன், தமனகன் என்னும் இரண்டு பாத்திரங்களும் சொல்லக்கூடியதாக பதின்மூன்று கதைகள் அதில் இடம் பெற்றிருந்தன. அங்குமிங்குமாகச் சில வடமொழிப் பழமொழிகளையும் சூரி மேற்கோளாகக் காட்டியிருந்தார்.

கல்வித் துறையில், எல்லா வகுப்பிலும் எல்லாப் பாடப் புத்தகங்களிலும் நீதி சந்திரிகா முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ 1853 முதல் இந்நாள் வரை இடம்பெற்று வருவது குறிப்பிடத் தக்கதாகும். இந்நூலின் சில வரிகளைக் கூட படிக்காமல் செல்கிற ஒரு பள்ளிக் குழந்தையைக் காண இயலாது என்கிற அளவுக்குச் சூரியின் செல்வாக்குப் பரவியிருந்தது; பரவியிருக்கிறது. இவ்வாறு அவர் உரைநடையில் தமக்கு முன்பிருந்த மரபினை உடைத்தெறிந்து, தனக்கெனவோர் சொந்தமான, செயற்கையான உரைநடைப் பாணியை உருவாக்கிக் கொண்டு, தனது வாழ்காலத்திலேயே அது தவிர்க்கப்பட முடியாத பாடநூலாக ஆக்கப்பட்டதையும் நேரில் கண்டவர்.

சூரி தமது உடைநடை நூலில் செய்திருந்த ஒரே ஒரு புதுமை என்னவெனில் பத்தி பத்திகளாகப் பிரித்து எழுதியுள்ளதுதான்! இந்நூல் அவரது இலக்கண விதிகளைப் பின்பற்றுவோருக்கு ஒரு மாதிரி நூலாக அமைந்துள்ளது. பண்டைய சம்பு காவியங்களின் அணிநலம் மிக்க இலக்கிய நடைக்குச் சூரி உயிர் கொடுத்தார்.

கி.பி. 575 ஐச் சார்ந்த கல்வெட்டுகளிலிருந்து பெறப்பட்டு, தொடர்ந்து பயின்றுவரும் எழுத்து இலக்கண முறையில் சில மாற்றங்களைச் செய்தார், சூரி. அதாவது அடியொலியான (அனுஸ்வரம்) 'ர'கரத்தைத் தொடர்ந்து வரும் மெய்யெழுத்துகளை இரட்டிப்பாக்கினார். ஆனால் 7 ஆம் நூற்றாண்டுக்குப்பின் வழக்கொழிந்த 'ற'கரத்திற்கு (ஆடொலி) உயிர்கொடுத்துள்ளார்.

அரை மூக்கொலியான 'ச'வின் போலி ஒன்றைச் சூரி பயன்படுத்தியுள்ளார். ஆனால் இது, அவர் மிகவும் மனப்பூர்வமாக நேசித்த அப்பகவியின் கனவுகளில் மட்டுமே இருந்த எழுத்தே தவிர,

பாறைக் கல்வெட்டுகளிலோ, செப்பேடுகளிலோ, அல்லது பனை ஓலைச் சுவடிகளின் எழுத்துகளிலோ காணப்பட்டதல்ல. இதுபோன்று பல்வேறு பொருத்தமில்லாத முரண்பாடுகள் இதில் உள்ளன. சூரி தனது சொந்தச் சொற்களைக் கொண்டு வரையளவு செய்தும் தனக்கு விருப்பமில்லாதவற்றைப் புறமொதுக்கியும் இந்நூலை ஆக்கியுள்ளார் என்றாலும் ஒட்டுமொத்தத்தில், அவரது பார்வையிலும் மரபிலக்கியவாதிகளின் பார்வையிலும் நோக்கும்போது, சூரியின் நீதிசந்திரிகா எனும் நூலொன்றுதான் உரைநடையில் முன்மாதிரியாகப் பின்பற்றக்கூடிய நூலாகத் திகழ்கிறது.

சூரியின் மற்றொரு உரைநடை நூல் ஆங்கிலத்தில் தெலுங்கில் மொழிபெயர்க்கப்பட்ட 'இந்துச் சட்டவியல்' நூலாகும். இது தாமஸ் லூ மிசிடஸ் ஸ்ட்ரேஞ்ச் (Thomas Lumicidus Strange) என்பவர் எழுதிய இந்துச் சட்டத் தொகுப்பு' (Manual of Hindu Law) எனும் நூலின் மொழியாக்கமாகும். இது நரஹரி கோபால கிருஷ்ணமாச்சார்யலு (1823-1888) என்பவரின் உதவியுடன் எழுதப்பட்டதாகும். இதன் மூல நூலாசிரியர் சென்னை உயர்நீதி மன்றத்தில் நீதிபதியாகப் பணிபுரிந்தவர். சூரியின் மொழிபெயர்ப்பு நூல், 'இந்து தர்ம சாஸ்திரா சங்கிரஹமு' எனும் பெயரில் 1858-ல் முதல் பதிப்பாக வெளிவந்தது. இதன் இரண்டாம் பதிப்பு 1863-லும் மூன்றாம் பதிப்பு 1869-லும் வெளிவந்தன. இந்த நூலின் படிகள் இந்தியாவில் கிடைக்கவில்லை என்றும் இங்கிலாந்தில் மட்டும் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன என்றும் பல்வேறு அறிஞர்கள் கூறியுள்ளனர்.

இம்மொழிபெயர்ப்பைச் செய்வதற்கு சூரியை ஏதோவொரு செயல் தூண்டியிருக்க வேண்டும் போல் தெரிகிறது. சூரியின் மொழி பெயர்ப்புக்கு ஏழு ஆண்டுகள் முன்னதாக வத்தம் வாசுதேவ சாஸ்திரி (19-ஆம் நூற்றாண்டு) என்பவரின் சட்டநூல் மொழிபெயர்ப்பு ஒன்று வெளியானது. அது இதே சட்டத்தை ஜான் ஃபிரேயர் தாம்' என்பவரின் ஆங்கில மூலத்தின் மொழிபெயர்ப்பாக, 'வியவகார தர்ப்பணமு அல்லது பூபாளியமு' எனும் பெயரில் அமைந்திருந்தது. அதன் இறுதி வரிகள் செய்யுள் வடிவில் அமைந்து, "இந்நூலின் பயன்பாடு (வழக்கியல் சார்ந்த) இவ்வுலகம் முழுமைக்கும் பயன்தரக்கூடியது என்பதால் நன்னயரும் பிறரும் வகுத்துள்ள இலக்கண நெறி விதிமுறைகளை மீறுவது தவறல்ல" என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.

இக்கூற்று மரபுசார் இலக்கணத்தில் ஆழ்ந்த பற்று வைத்திருந்த சூரியின் மனத்தைப் புண்படுத்தியிருக்க வேண்டும். மேலும் சாஸ்திரியின் சட்டநூல் மொழிபெயர்ப்பு சூரியால் ஏற்றுக் கொள்ளப்பட முடியாத சமகால உரைநடை மொழியில் அமைந்திருந்தது. இதன் எதிர் விளைவாக எழுந்ததே சூரியின் சட்டநூல் மொழி பெயர்ப்பாகும்.

சூரியின் நூல் 408 பத்திகளாகவும் கீழ்க்காணுமாறு 14 இயல்களாகவும் அமைந்துள்ளது:

சாஸ்திரமுல உற்பத்தி கிரமமு (சட்டமும் அதன் மூல ஆதாரங்களும்)

விவாகமு (திருமணம்)

புத்திர சுவீகாரம் (வளர்ப்புப் பிள்ளை)

இரட்சகத்வமு (பாதுகாவலர்)

சொம்மு (சொத்து)

விநியோகமு (உடைமை மாற்றம்)

உயில் (விருப்பாவணம்)

சொம்முலோன் ஜெயந்தகின வியாயமுலு (சொத்து மீதான செலவுகள்)

தாயானர்ஹதா (வாரிசுரிமை பெறத் தகுதியில்லாமை)

தாயாபாகமு (பாகப் பிரிவினை)

தாயாதிகாரமு (மரபுரிமை)

வங்காள சாஸ்திர சம்பிரதாயமு (வங்காளச் சட்டம்)

மலையாள தேச சாஸ்திரமு (மலையாளச் சட்டம்)

கிரய விக்ரயாதி வியவஹாரமு (ஒப்பந்தங்கள்)

இயல்களின் தலைப்புப் பெயர்களே அவரது சிந்தனை எப்படிச் செயல்பட்டுக் கொண்டிருந்தது என்பதைக் காட்டுகிறது. நடைமுறைப் பயன்பாட்டில் இருந்ததைக் காட்டிலும் சிலவற்றில், அகராதிச் சொற்களையும், கடனாகப் பெற்ற சொற்களையும், புதிய சொல்லாட்சிகளையும் இச்சட்ட நூலில் புகுத்தியுள்ளார்.

நடைமுறையில் இருந்த சொல்லாட்சிகளுக்கும் அவர் தேர்ந்தெடுத்த சொல்லாட்சிகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடுகளைக் கீழ்க்காணும் அட்டவணையால் அறியலாம்.

| மூலம் | சூரியின் மொழிபெயர்ப்பு | சூரியின் சமகால வழக்குச் சொல் | இப்போதைய வழக்குச் சொல் |
|---|---|---|---|
| 1. Law சட்டம் | சாஸ்திரமு | வியவகாரமு, தர்மமு | நியாய சாஸ்திரம் |
| 2. Source மூலம் | உற்பத்தி கிரமமு | மூலமு | ஆதாரம் |
| 3. Adotpion மகவேற்பு | புத்திர சுவீகாரமு | பரிகிரஹமு | தத்ததா, தத்த சுவீகாரம் |
| 4. Guardinanship பாதுகாவலர் | ரக்ஷகாத்வமு | ரக்ஷகாத்வமு | சம்ரட்சண |
| 5. Property சொத்து | சொம்மு | சம்பத்தி, திரவியமு, தனமு | ஆஸ்தி (தனம்) |
| 6. Alienation உடைமை மாற்றம் | விநியோகமு | பராதீனத | அன்யா கிராந்த (த்வ)ம் |
| 7. Wills விருப்பாவணம் | உயிலு | சங்கல்பமு, இச்சா | வில்லுநாமாலு |
| 8. Charges on Property சொத்து மீதான செலவுகள் | சொம்முலோ ஜேயா வலசின வியயமுலு | நிட்சேபமு | ஆஸ்தி பாரம் |
| 9. Disability to inherit மரபுரிமை பெறத் தகுதியில்லாமை | தாயானர்ஹதா | அயோக்யதா | வாரசத்வானிகி அனர்ஹதா |
| 10. Partition பாகப் பிரிவினை | தாயாபாகமு | விபாகமு, விபஜனா | (ஆஸ்தி) பம்பகம் |
| 11. Succession மரபுரிமை | தாயாதிகாரமு | உத்தராதிகாரித்வமு | வாரசத்வம் |

| | | | |
|---|---|---|---|
| 12. Bengal Law வங்காளச் சட்டம் | பங்களா சாஸ்திரமு | பங்களா தர்மமு | பெங்கால் நியாய வியவகாரம்/ தாயாபாகம் |
| 13. Malabar Law மலையாளச் சட்டம் | மலையாள தேச சாஸ்திரமு | மலபார் தர்மமு | மருமகதாயம் |
| 14. Immovable அசையாச் சொத்து | ஸ்தாவரமு | ஸ்திரமு | ஸ்திரம் |
| 15. Movable அசையும் சொத்து | ஜங்கமமு | சரமு | சரம் |

மேற்கண்டுள்ள அட்டவணையிலிருந்து Will எனும் சொல்லுக்கு மட்டும் இரவல் சொல்லைப் பயன்படுத்தியுள்ள சூரி, சொத்து என்பதற்கு மட்டும் 'சொம்மு' எனும் சொந்த மொழிச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். மற்ற அனைத்தும் வடமொழிச் சொற்களே! அவர் கையாண்டுள்ள வடமொழிச் சொற்கள் கூட அவரது காலத்தில் வழங்கப்பட்டவையல்ல. மலையாளச் சட்டம், வங்காளச் சட்டம் போன்ற சொற்களும் கூட மாறுபாடாக மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. மேலும், அவரது மொழிபெயர்ப்பு உண்மையான நேர்மையான பெயர்ப்பாக இல்லை. பெரும்பாலும் மையக்கருத்தில் மட்டும் கவனம் செலுத்தி மொழிபெயர்ப்பைச் சுருக்கமாகச் செய்துள்ளார்.

சில எடுத்துக்காட்டுகள்:

மூல நூல் (பத்தி.40, இயல்.5 சொத்து பற்றியது)

**மொழி பெயர்ப்பு:**

"திரவியமு பிதுரார்ஜிதம் அனி சுயார்ஜிதம் அனி மாரல ரெண்டு விதமுலகா, விபாகிம்ப பாத்யமுடு, பிதுரிதிரவிய முகானி தானிசேத்த சம்பாதிஞ்சினதிகானி, சங்கம ஸ்தாவரமுலம் தேதயினானு, பிதுருதிரவிய நிரபேஷசமுக ஸ்வப்ராய சமுசேத சம்பாதிஞ்சின திரவியமு சுயார்ஜிதம் அனபதுனு".

**பொருள்:**

*சொத்து என்பது மூதாதையர் சொத்து என்றும், சுய சொத்து என்றும் இருவகைப் படும். இதில் மூதாதையர் சொத்து என்பது தன் முயற்சியாலன்றி முன்னோர் விட்டுச் சென்ற அசையும் சொத்து மற்றும் அசையாச் சொத்துகளைக் குறிக்கும். தனது சொந்த முயற்சியால் ஒருவன் ஈட்டுவது சுயசொத்து எனப்படும்.*

ஆங்கில மூலத்தில் உள்ள ஒரு சில சொற்கள் மொழி பெயர்க்கப்படாமல் விடப்பட்டுள்ளன. மொழி பெயர்ப்பிலும் மூலத்தில் உள்ளபடியே கூடுதலாக திரும்பத் திரும்ப வந்துள்ளன. அதிக அளவில் வடமொழிமயமாகவுள்ள சூரியின் மொழிபெயர்ப்பானது அதிகார வட்டத்தைத் தவிர பிற இடங்களில் அவ்வளவாக கவனத்தைக் கவராது என்பது வெளிப்படை. அதனால்தான் இம்மொழிபெயர்ப்பு ஏழு கடல்களைத் தாண்டிச் சென்று இலண்டனில் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

**சிறுசிறு படைப்புகளும் படைப்புப் பணிகளும்:**

பிரிட்டிஷ் பேரரசி விக்டோரியா மகாராணியைப் புகழ்ந்து 1837-ல் சில கவிதைகளையும், 1845-47 ஆம் ஆண்டுகளுக் கிடையே பச்சையப்பன் கல்லூரியில் நிறுவனர் நாள் விழாக்களில் பச்சையப்பரைப் புகழ்ந்து சில கவிதைகளையும் சூரி இயற்றினார் என்பதை முதலாம் இயலிலேயே கண்டோம்.

பச்சையப்பரைப் புகழ்ந்து எழுதிய கவிதைகள் 1850-ல் ''பச்சையப்ப மசோ யந்தணமு'' எனும் தலைப்பில் வெளிவந்தன.

சூரி, சில வடமொழிச் சுலோகங்களையும் இயற்றியுள்ளார். அவற்றுள் ஒன்று, 1853-ல் வெளிவந்த 'சப்தலட்சண சங்கிரஹம்' எனும் நூலின் தொடக்கமாக அமைந்துள்ளது.

இதே போல் நீதிசந்திரிகா (1853), பாலவியாகரணமு (1858) ஆகிய நூல்களின் தொடக்கத்தில் சில தெலுங்குக் கவிதைகளையும் இயற்றியுளள்ார். 'பாலவியாகரணமு' நூலின் தொடக்கமாக உள்ள கவிதைகளிலிருந்து அவ்விலக்கண நூலின் உண்மையான படைப்பாளர் சூரி அல்ல என்றும், வேறு ஒருவரின் மூல நூ லிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது தான் என்பதைச் சூரியே ஒப்புக் கொண்டுள்ளார் என்றும் மாறுபாடான முறையில் சொற்களைக் கூறுபடுத்திக் காட்டி பொருள் விளக்கம் தந்துள்ளார், சூரியின் விமர்சகர்களில் ஒருவரான கல்லூரி வேங்கடரமண சாஸ்திரியார்.

இந்த விமர்சனம் ஏதோவொரு மாயாஜாலக் கண்கட்டு வித்தையைப் போல் அமைந்து நியாயமற்றதாக உள்ளது.

சூரி மேலும் சில கவிதைகளை அவ்வப்போது எழுதியதாகவும் கூறப்படுகிறது. ஆனால் அவை எதுவும் கிடைக்கவில்லை.

1855-ல் நீதி போதிக்கும் கவிதைத் தொகுப்பு ஒன்றை 'நீதிசங்கிரஹமு' எனும் பெயரில் சூரி வெளியிட்டார். இது மகாபாரதம் போன்ற சில பழம்பெரும் இலக்கியங்களிலிருந்து தொகுக்கப்பட்ட 100 செய்யுள்களைக் கொண்டுள்ளது. இது மாணவர்களுக்காகச் சூரியால் தொகுக்கப்பட்டுள்ளதால் அவர்கள் புரிந்துக் கொள்ளவும், மனதில் பதிய வைத்துக் கொள்ளவும், சிறு விளக்கக் குறிப்புகளைக் கொண்டுள்ளது. இத்தொகுப்பு எந்த அளவுக்கு மக்களிடையே வரவேற்பைப் பெற்றது என்று தெரியவில்லை.

சூரியின் ஆர்வலர்களில் ஒருவரும், 'இராமணீயமு' என்னும் பாராட்டுக்குரிய ஆராய்ச்சி நூலின் ஆசிரியருமான, துவ்வுரி வேங்கடரமண சாஸ்திரி, 'சுஜனரஞ்சனி' எனும் இலக்கிய இதழைத் தொடங்கித் தமது சொந்த அச்சகமான 'வாணி தர்ப்பண முத்ராட்சர சாலை'யிலேயே அச்சிட்டு, சூரி வெளியிட்டதாகக் குறிப்பிட்டுள்ளார். ''அரசிடமிருந்து தங்கக் காப்புகளைச் சூரி பரிசாகப் பெற்றார்'' என்று இவர் கூறிய இன்னொரு ஆதாரமற்ற கூற்றைப்போல இதுவும் ஆதாரமற்றதாகவே உள்ளது. சூரி 1862-ல் காலமானார் என்பது தெளிவாகத் தெரிகிறது. 'சுஜன ரஞ்சனி'யின் முதல் இதழ் 1865-ல் தான் வெளியாகியுள்ளது. இவ்விதழுக்கு இணையாசிரியர்களாக, விஞ்சமுரி கிருஷ்ணமாச்சார்யலு, பகுஜனபள்ளி சீத்தாராமாச் சார்யலு, கா. சுப்பராயலு நாயுடு ஆகிய பச்சையப்பன் கல்லூரி ஆசிரியர்கள் பணியாற்றி உள்ளனர். இவர்கள் இவ்விதழில் தொடர்ந்து கட்டுரைகளை எழுதியுள்ளனர். ஆனால் இக்கட்டுரைகள் யாவும் பாடநூல்களில் உள்ளவற்றின் விளக்கக் கட்டுரைகளாகவே உள்ளன.

'வர்த்தமான தரங்கிணி' என்னும் இதழின் ஆசிரியருக்கு 22.10.1842-ல் சூரி எழுதிய ஒரேயொரு கடிதம் இப்போது கிடைத்துள்ளது. இக்கடிதம் 1842 நவம்பர்-3 நாளிட்ட இவ்விதழில் வெளியிடப்பட்டுள்ளது. இக்கடிதத்தின் இறுதியில் சி.சு. என்று சுருக்கொப்பமிடப்பட்டுள்ளது. இந்தச் சுருக்கெழுத்துகள் பச்சையப்ப முதலியார் இலவசப் பள்ளியின் பணியாற்றும்

தெலுங்குப் பண்டிதரைக் குறிப்பதாக 1842 நவம்பர்-7 நாளிட்ட இதழில் தலையங்க விளக்கம் தரப்பட்டுள்ளது.

இக்கடிதத்தில் சூரி, தாம் அனுப்பி வைக்கும் ஒரு கவிதையை இதழில் வெளியிட்டு, அதன் பொருள் விளக்கத்தை அறிஞர்களிடம் கோரிப் பெற்று மீண்டும் அவற்றை உரிய திருத்தங்களுடன் வெளியிடுமாறும் இதழாசிரியரைக் கேட்டுக் கொண்டுள்ளார். இந்தக் கருணைமிகு செயலுக்குத் தாம் மிகவும் நன்றியுள்ளராக இருப்பார் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இதன்மூலம், 1842 வாக்கில் சூரி பல்வேறு பழம்பெரும் இலக்கியங்களிலிருந்து பல்வேறு மரபுத் தொடர்களையும் பழைய இலக்கியக் குறிப்புகளையும் தொகுத்து பின் அவற்றைத் தரமானதாக்கி நிலைப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார் என்று தெரிகிறது. இவை அவரது பேரகராதித் தொகுப்புக்கும் இலக்கணப் படைப்புகளுக்கும் பேருதவியாக இருந்தனவென்றும் தெரிகிறது. இக்கடிதத்தில் சூரி பயன்படுத்தியுளள் சில சொல்வடிவங்கள் அவர் வகுத்துள்ள இலக்கண விதிகளுக்கு மாறுபாடாக அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக, 'சேதுறு' என்னும் சொல், சூரியின் பாலவியாகரண வினைச்சொல் இயலில் உள்ள 108-ஆம் விதிப்படி இலக்கணப் பிழையுடையதாகும். இதுபோன்ற பல பிழைகள் இச்சிறிய கடிதத்தில் அமைந்துள்ளன. ஆனால், பின்னர் இது விவாதத்துக்குட்பட்டு, 1842- ஆம் ஆண்டில் சூரி, சொற்களின் சரியான பயன்பாடு பற்றிச் சிந்திக்கவில்லை என்றும், அவரது இலக்கண நூல் அதன்பின் 16 ஆண்டுகள் கழித்தே வெளிவந்தது என்றும் விளக்கம் கூறப்பட்டது.

தெலுங்கு மகாபாரதத்தில் ஆதிபருவத்தை அச்சிட முனைந்த சி.பி.பிரௌன், அதன் கையெழுத்துப் பிரதிகளைத் திருத்திச் சரிபார்க்கும் பணியில் வையாகரணம் இராமானுஜாச்சார்யலுவுக்கு உதவியாக இருக்க சின்னையாவையும் 1840-ல் பணிக்கு அமர்த்திக் கொண்டார் என்பதை முதல் இயலில் கண்டோம்.

'வர்த்தமான தரங்கிணி' ஏட்டில் காணப்படும் ஒரு விளம்பரத் தகவலின்படி 'ஆதிபருவம்' 1842 ஆகஸ்டு மாதத்தில் வெளி வந்ததாகத் தெரிகிறது. ஆனால் 1847 மே திங்களில் வெளியான பதிப்பில் மட்டுமே இராமானுஜாச்சார்யலுவைப் பதிப்பாசிரிய ரென்றும் ப. சின்னையாவை அவரது உதவியாளரென்றும் குறிப்பிட்டுள்ளது. உண்மையில், இந்த 'ஆதிபருவம்' பல

பதிப்புகளைக் கண்டுள்ளது. அவற்றில் ஒரு பதிப்புக்காக மட்டுமே சூரி பணியாற்றியுள்ளார்.

1842 - ஆம் ஆண்டில் 'சூரி' எனும் பட்டம் சின்னையாவுக்குக் கிடைக்கவில்லை. இந்தப் பத்திரிகையின் நான்காவது தொகுதியில் அவர் ''சாத்தானி சின்னையா'' என்று மட்டுமே குறிப் பிடப்பட்டுள்ளார். இத்தகைய விவரங்கள் எப்படியிருந்த போதிலும் சூரி தரம் வாய்ந்தவற்றை மட்டுமே பதிப்பிக்க வேண்டும் என்பதில் ஆர்வமும் அக்கறையும் கொண்டு பணியாற்றியவர் என்பது குறிப்பிடத்தக்கது. அச்சுப் பிழைகளைச் சரிபார்ப்பதில் கூட அவர் மிகுந்த கவனமும் பொறுப்பும் கொண்டிருந்தார். தம்முடைய சொந்தக் கருத்துகளுக்கேற்பவே மூல நூல்களைத் திருத்திச் சரியான சொற்களையும் பயன்படுத்துவதில் மாற்றங்களைப் புகுத்தியுள்ளார். இந்தப் பழக்கம் பின்னாளில் அவருக்கே பாதகமாக அமைந்து விட்டது. சூரி இறந்தபின் அவரது நீதி சந்திரிகாவைப் பதிப்பித்த சூரியின் மைத்துனர் சூரியின் சொற்றொடர்கள் சிலவற்றைத் தமது விருப்பம் போல் மாற்றியமைத்துள்ளார். இது போன்று பல்வேறு நிகழ்வுகள் உள்ளதாக ஜி.வி. இராமமூர்த்தி பட்டியலிட்டுக் காட்டுகின்றார்.

சுருங்கக்கூறின், சின்னையா சூரி குறைந்தபட்சம் இருபெரும் புகழ்பெற்ற படைப்புகளைப் படைத்துள்ளார். அவை நீதிசந்திரிகாவும், பாலவியாகரணமுவும்'.

புதிய எழுத்தாளர்களுக்குப் பண்டைய இலக்கிய உரைநடையை அறிமுகப்படுத்தும் ஒரு மாதிரி நூலாக 'நீதிசந்திரிகா' அமைந்துள்ளது.

'பாலவியாகரணமு' தெலுங்குமொழியைப் பிழையற எழுதுவதற்கான விதிமுறைகளை வகுத்துத் தந்துள்ளது.

இவ்விரு நூல்களும், இந்நூற்றாண்டின் தொடக்கம் முதல் செல்வாக்கால் எல்லையற்றுப் பரவி விரிந்து, (இரண்டாவது நூல் தனது சிறப்பை முற்றிலுமாக இழந்துவிட்ட போதிலும்) இன்றுவரையில் எவரும் புறக்கணிக்கப்பட முடியாத அளவுக்குப் புகழைத் தக்க வைத்துக் கொண்டுள்ளன.

ஒன்றேகால் நூற்றாண்டுக் காலத்துக்குமேல் தனது புகழையும் செல்வாக்கையும் கொண்டு இலக்கிய உலகில் ஒப்பாரும் மிக்காருமின்றி முடிசூடா மன்னனாய் உலாவந்த நல்வாய்ப்பைப்

பெற்றிருந்தவர் சூரி. அதே சமயத்தில் அவர் இறந்தபின், அவர் ஒரு கருத்துத் திருடர், எழுத்துத் திருடர், பிற்போக்காளர், பழமைவாதி என்றெல்லாம் இகழப்பட்ட அவமானத்திற்கும் ஆளானவர்.

சூரியைப் பற்றியும் அவரது படைப்புகளைப் பற்றியும் எழுந்த எதிர்ப்புகள் - கருத்து மாறுபாடுகள் பற்றி விரிவாக அடுத்த இயலில் காண்போம்.

# 4

# கருத்து மாறுபாடுகளும் எதிர்விளைவுகளும்

சின்னையா சூரி போதித்துக் கடைப்பிடித்து வந்த பழமைவாதமும், கடுமையான கட்டுப்பாட்டு விதிமுறைகளும் தெலுங்கு மொழியைத் தேர்வுக்காகக் படித்த மாணவர்களின் சிறுவட்டத்திற்குள் மட்டுமே சுழன்று கொண்டிருந்தன. அதே நேரத்தில் அவர்கள் ஓரளவுக்கு ஆங்கில இலக்கியங்களையும் கற்று வந்தனர். மரபிலக்கியவாதிகளின் கட்டுப்பாடான உலகிற்கு வெளியே, ஆங்கிலேய நிர்வாகத்தின் தேவைகளைக் கருத்தில் கொண்டும், சமுதாயத் தேவைகளை முன்னிட்டும் மொழியை நவீனப்படுத்தி சிந்தனையைத் தூண்டும் வகையிலான செயல்பாடுகள் பெருத்த அளவில் மிகத் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. இத்தகையச் செயல்பாடுகளின் ஒட்டுமொத்த விளைவு சூரியின் மரபுசார் அணுகுமுறைகளிலும் அவருக்கு ஆதரவு தந்த நிர்வாகத்திலும் பழுதினை உண்டாக்கியது. பாடத் திட்டத்தில் ஒன்றாக இடம் பெற்ற சமூக அறிவியல்களின் மூலம் கற்பிக்கப்பட்ட அறிவுப் பரப்பானது இளைஞர்களிடையே விழிப்புணர்வையும் சிந்தனையாளர்களின் எண்ணப் பரப்பையும் தூண்டிவிட்டது. வரலாற்றுணர்வு, பிற இடங்களில் நிகழ்வுற்ற சமூக அரசியல் நிலவரங்கள், அறிவியல் முன்னேற்றங்கள், மேலைநாட்டு இலக்கியங்களின் இயல்பு- வேறுபாடுகள் முதலியவை அனைத்தும் சேர்ந்து சிந்தனையில் ஒருபெரும் தாக்கத்தை உருவாக்கிக் கொண்டிருந்த காலம் அது.

இங்கிலாந்திலிருந்து வந்த சமயத் தொண்டர்கள் வெளியிட்ட இலக்கண நூல்களும் அகராதிகளும் இங்குள்ள பழமைவாதிகள் மேற்கொண்டிருந்த முறைகளிலிருந்து மாறுபட்டு அடிப்படையிலேயே முற்றிலும் வேறுபட்ட அணுகுமுறைகளைக் கொண்டிருந்தன.

கீழ்க்கணட கூற்றுகளும் இவை போன்ற கருத்துகளும் சின்னையா சூரியின் காலத்திய மூத்த அறிஞர்களான இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரி போன்ற ஒருசிலரின் மனத்திலாவது மாற்றத்தை உண்டாக்கவே செய்தன!

''சீனர்களைப் போல் இந்து இலக்கணவாதிகள், மாணவன் முன்பே தெரிந்து கொண்டிருப்பான் என்று நினைத்துக் கொண்டு பேச்சுவழக்கில் உள்ள மொழிகளை ஒதுக்கி விடுகின்றனர்; செய்யுளின் சிறப்பியல்புகளை மட்டுமே கற்பிக்கின்றனர்.''

*-சி.பி.பிரௌன்*
*தெலுங்கு மொழி இலக்கணம்*
*(A Grammar of the Telugu Language)*

''ஒவ்வொரு தென்னிந்திய மொழியும் ஒவ்வொரு செய்யுள் மொழியையும் பேச்சுவழக்கு மொழியையும் கொண்டுள்ளன. இவை, ஆங்கில மொழியிலிருந்து சாக்ஸன் வேறுபட்டிருப்பதைப் போல, பெருமளவு வேறுபாடுகளைக் கொண்டுள்ளன.''

*- சி.பி. பிரௌன்*
*(தெலுங்கு- ஆங்கில மொழி அகராதி முன்னுரையில்)*

''ஒரு மொழியின் வளர்ச்சி தொடங்கியவுடனேயே சாதாரண மக்களின் பேச்சுவழக்கிலிருந்து வேறுபட்டுத் தனித்துவத்தோடு அதற்கெனவோர் இலக்கணம், சொற்றொகுதியைக் கொண்டு இலக்கிய மொழியாகவே பரிணமிக்கும் இலக்கிய நடையைப் புலப்படுத்துவது இந்திய மொழிகளின் குறிப்பிடத்தக்கச் சிறப்பியல்பாக இருக்கிறது.''

*- பிஷப். ஆர். கால்டுவெல்*
*திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்*

பள்ளியிலோ, கல்லூரியிலோ மாணவர்களாக இல்லாமல் தமது மொழிகளைப் பற்றி அறிய விரும்பியோர் மேற்கண்ட கருத்துகளுடன் சிந்திக்கத் தொடங்கினர்.

புதுமை மாற்றத்தை விரும்பி, மரபுசாராத உரைநடைப் பாணியைத் தமது எல்லாவகைப் படைப்புகளிலும் கையாண்டுவந்த சின்னையா சூரியின் முன்னோடிகள், அடிப்படை அறிவியல், தொடக்கக் கல்விப் பாடங்கள் உள்ளிட்ட பல்வேறு இலக்கிய வகைகளை உருவாக்கி வந்தனர். ஆனால் அவை அனைத்தையும் திடுதிப்பென்று மாற்றி சூரி வகுத்த விதிகளுக்கேற்பத் திருத்தியெழுத நேர்ந்துவிட்டது. இதன் காரணமாக கடும் சீற்றமும் எதிர்ப்பும் கிளம்பியதில் வியப்பொன்றுமில்லை.

அனைத்துத் தரப்பு மக்களுக்கும் ஏற்ற கல்வியைப் பரப்புவதில் ஒரேயொரு குறிப்பிட்ட தொடர்புநிலை மட்டுமே எல்லாவகைத் தகவல் தொடர்புகளுக்கும் போதாது என்று கருதப்பட்டது. உயர்சாதி வகுப்பினரில் சிறந்ததோர் குழாமைச் சேராதவர்கள் இவ்விதிகளைப் பின்பற்ற இயலாதவர்களாயினர். சாமிநேநி முத்து நரசிம்மம் நாயுடு (19-ஆம் நூற்றாண்டு) என்பவர் தமது ஹிதசூசனி (1867) என்னும் நூலில் இதுபோன்ற சிக்கல்களைப் பற்றி விவரித்து மொழி சார்பாகவும், சமுதாயம் சார்பாகவும் அமையாத பழைய மரபுகளை விட்டொழிப்பதே நல்லது என்றும் கூறியிருந்தார். இவரைப் போன்ற அரசு அலுவலில் இருந்த கல்வியாளர் பலரும் இதே கருத்தை வலியுறுத்தினர். கர்னல் காலின் மேக்கன்ஸி (Col. Collin Mackenzie) என்பவரால் சேகரிக்கப்பட்டு, சி.பி. பிரெளனால் சீரமைக்கப்பட்ட சில உள்ளூர் ஆவணங்கள், சமுதாய வரலாற்றில் ஆவர்ம் கொண்ட ஆராய்ச்சிகளைத் தூண்டிவிட்டு பழைய வரலாற்றைத் திரும்பி நோக்க வைத்தன.

முதலில் எல்லீஸ் என்பவர் எழுதிய நூல் அவ்வளவாகப் பாதிப்பை ஏற்படுத்தாத நிலையில், பிஷப் ராபர்ட் கால்டுவெல்லின் பெரும் படைப்பு, கல்வியாளர்களின் மனத்தில் சிறிது சந்தேகத்தை உருவாக்கி, வடமொழியிலிருந்து பிராகிருதம் வழியாகவோ, அல்லது பிராகிருதத்திலிருந்து வடமொழி வழியாகவோ தென்னிந்திய மொழிகள் உருவாயின என்று எண்ணிவந்த கருத்தில் ஒரு சலசலப்பை உருவாக்கிவிட்டது. மேற்கத்திய அறிஞர்கள் எழுதிய இலக்கண நூல்கள் முழுமையாக, பழைமையைவிட சமகால வழக்கில் உள்ள பேச்சு மொழிக்கே பெரிதும் சிறப்பிடம் தருவதாக அமைந்திருந்தன. மேலைநாட்டுச் சமுதாயச் சூழலில் பல்வேறு புதிய இலக்கிய வகைகளின் உருவாக்கம் கண்டு, அதேபோல் நாமும் படைக்க வேண்டும் என்கிற ஆர்வநிலை இந்திய எழுத்தாளர்களிடையேயும் எழுந்தது.

பள்ளிகள், கல்லூரிகள், இலக்கண நூல்கள், அகராதிகள் என்பன மட்டுமின்றி, தாய்மொழியிலமைந்த அச்சகங்களும் மிகப்பழைய இலக்கியங்களையும் வெளிக்கொணரும் சூழ்நிலையை எளிமையாக்கின. அதுவரை கையெழுத்துப் பிரதிகளாக, தாள்களாக, ஓலைச் சுவடிகளாக இருந்தவையெல்லாம் சேகரிக்கப்பட்டு, சரிபார்க்கப்பட்டு, திருத்தியமைக்கப்பட்டு அச்சிடப்பட்டு வெளிவந்தன. இதுபோன்ற ஒரே நோக்கத்திற்காகச் சேவை மனப்பாங்குடனும் விருப்பார்வத்துடனும் செயல்பட்டுவந்த சமயப் பரப்புக் குழுக்களும், சி.பி. பிரௌன் போன்ற தனிமனிதர்களும், இங்கிருந்த அறிஞர் பெருமக்களின் உதவியுடன், சில நேரங்களில் தற்கால உரைநடையில் அமைந்த ஆராய்ச்சியுரைகளுடனும் நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டனர். இத்தகையச் சூழ்நிலையில்தான் சின்னையா சூரியும் அவரது ஆதரவாளர்கள் சிலரும் மேற்கொண்ட அணுகுமுறைகள் பலரது எதிர்ப்பு நடவடிக்கைகளுக்கும் ஆளாயின.

மேலை நாட்டறிஞர்கள் மூலநூலுக்கு உண்மையாக நடந்து கொண்டு, அதில் உள்ள எதையும் திருத்தம் செய்யாமல் உள்ளது உள்ளபடியே வெளியிட்டும், கையெழுத்துப் பிரதிகளில் உள்ளவை ஒன்றுக்கொன்று மாறுபட்டிருந்து அவற்றுள் ஒன்றைத் தரமானதாக ஏற்க வேண்டியிருப்பின் மூலத்தை அப்படியே கவனமாகப் பெயர்த்தெழுதி வெளியிட்டும் வந்த நேரத்தில், சூரியும் அவரது ஆதரவாளர்களும் தமது சொந்த இலக்கண விதிகளுக்கேற்ப மூல நூல்களைத் திருத்தியமைத்து வெளியிட்டனர். இவ்வாறு பழம்பெரும் இலக்கியங்களைத் திருத்திய செயல் ஒரே நூலுக்கு பல்வேறு அறிஞர்களும் பல்வேறு கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு தனித்தனியே பதிப்பித்து வெளியிட்டதன் மூலம் வெளியுலகுக்குத் தெரியாமல் போகவில்லை. சூரியின் இச்செயல் பெரும் எதிர்ப்பையும் மனக் கசப்பையும் உருவாக்கிவிட்டது. அப்போது, ஒரு நூலை பதிப்புக்கு ஏற்கும் முன்பாக, பல்வேறு கையெழுத்துப் பிரதிகளில் எதனை ஏற்பது என்பது குறித்துப் பல்வேறு விவாதங்களும் பேச்சுக்களும் நிகழ்ந்திருக்க வேண்டும். ஆனால், தீவினைவயத்தால் அது குறித்த சான்றுகள் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. சூரி தமது இலக்கண விதிகளின் தூய்மை குறித்தோ, தமது அணுகுமுறைகளின் நேர்மை குறித்தோ, பழைமைவாத மரபு குறித்தோ எவ்விதமான மனந்திறந்த வாதத்திலும் பங்கேற்றதற்கானச் சான்றுகள் ஏதுமில்லை. அவர் தமது போக்கில் தமது பணியில் தீவிரமாக ஈடுபட்டிருந்த போது ஏதும் பேசாதிருக்க முடிவெடுத்திருந்தார் போலும்! இம்மாதிரியான

பேச்சுகளும், விவாதங்களும் அவரது மனத்தையும் செயல்பாடுகளையும் பாதிக்கவோ தடைசெய்யவோ முடியாது என்பதை அவர் அறிந்தே இருந்தார்.

தெலுங்கில் உள்ள பழம்பெரும் நூலான ஆந்திர சப்தசிந்தாமணியின் ஆசிரியரும், பண்டைய இலக்கிய ஆசிரியர்களில் மிகவும் புகழ் பெற்றவருமான நன்னயர் மற்றும் பாணிணிக்கு ஒரு வரருசியைப் போல மூல விதிகளுக்கேற்ற விளக்கங்களை எழுதித் தந்த அதர்வணாச்சார்யர் ஆகிய இருவரைத் தவிர வேறெவரையும் சூரி தமது இலக்கண நூலில் குறிப்பிடவில்லை.

சூரி பலவகையிலும் அணுக்கமாகப் பின்பற்றிய அப்பகவி (17-ஆம் நூற்றாண்டு)யின் பெயர்கூட சூரியால் குறிப்பிடப் படவில்லை என்பது வியப்பாக உள்ளது. தமக்கு மூத்த சமகாலப் பண்டிதர்களின் இலக்கண நூல்களைப் பாடமாக நடத்திய சூரி, அவர்களையே மிகவும் மோசமாக விமர்சித்துள்ளார். அவர்களின் எடுத்துக் காட்டுகளையும், கருத்துகளையும் தமது நூலில் பயன்படுத்தியுள்ள சூரி, பாலவியாகரணத்தில் அவர்களின் பெயர்களைக் குறிப்பிடுவதைத் தவிர்த்துள்ளார். அவர்களின் பெயர்களுக்குப் பதிலாக ''ஒரு சிலர், யாரோ ஒருவர், ஒருவர்'' போன்ற சொற்களைக் கையாண்டுள்ளார்.

ஆரம்பகால இலக்கண நூல்களை மிகவும் ஊன்றிப் பார்ப்போமானால், சூரி தமக்கு மூத்த சமகாலப் பண்டிதர்களுக்குக் கடன்பட்டிருக்கிறார் எனபதற்கான சான்றுகளையும் விளக்கங்களையும் எடுத்துக் காட்டமுடியும்.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் உயிர்நெடிலானது குறுகுமென்றும், சில சொற்களில் முதலெழுத்து மறையுமென்றும் சூரி குறிப்பிட்டுள்ள செய்திகள் உண்மையில் அப்பகவியின் கண்டு பிடிப்புகளாகும்.

த,ல எழுத்துகளுக்கிடையே சில வடிவங்களில் வேறுபாடுகள் இருப்பதை முதலில் சுட்டிக் காட்டியவர் இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரியாவார். இவரது இலக்கண நூலை சூரி இருபதாண்டுக் காலம் பாடம் நடத்தியவர். அந்நூலை ஏளனம் செய்யும் வகையிலும் ஏற்கமுடியாத வகையிலும் சூரி குறிப்பிட்டுள்ளார்.

சூரி, தமது 'வர்ணகமு' எனும் விகுதிக்கு (பின்னொட்டு) ஒத்த ஒலிப்புடையச் சொற்களாக 'வன்னியா' 'வன்னி' போன்ற

சொற்களின் மாற்று வடிவங்களைப் பயன்படுத்தியுள்ளார். ஆனால் இச்சொற்கள் உண்மையில் குருமூர்த்தி சாஸ்திரிக்கு முன்பே வாழ்ந்திருந்த வேதம் பாட்டாபிராம சாஸ்திரியாரால் முதன்முதல் கையாளப்பட்டவையாகும்.

சூரியின் 'இலக்கண விதிகளுக்கு மாறானவை' எனும் விளக்கம் கூட மேற்கண்ட அறிஞரிடமிருந்து கடனாகப் பெற்ற ஒன்றுதான்! ஆனால் அந்த விதிக்கான எடுத்துக்காட்டுமட்டும் 1852-ல் வெளியான புதூரி சீத்தாராம சாஸ்திரியின் 'பிரஸ்னோத்தராந்திர வியாகரணமு' எனும் நூலிலிருந்து எடுக்கப்பட்டதாகும். இலக்கணம் சாரா சொல்லுக்கான எடுத்துக்காட்டு ஒன்றையும் இந்நூ லிலிருந்தே சூரி எடுத்துள்ளார். சூரியின் நூல் அவராலேயே பாடமாக நடத்தப்பட்டது; அவரது காலத்திலேயே 1834-லும் 1852-லும் இரண்டு பதிப்புகளைக் கண்டது என்பதால் இத்தகைய தவறுகள் ஏதோ 'ஒரே மாதிரி நிகழ்வுகள்' என்று வாதிட முடியாது. ஆனால் உண்மை இப்படியெல்லாம் இருந்தபோதிலும் கூட அவரது நூலின் முக்கியத்துவம் குறைவு படவில்லை; மற்ற நூல்களைவிட மிகவும் வல்லமை வாய்ந்ததாக, எதிர்ப்புகளை வென்று நிற்கக் கூடியதாக இருந்தது. ஆனால் பல வகைகளிலும் தாம் நன்றிக் கடன் பட்டிருந்த மூத்த அறிஞர்களுக்கு உரிய வகையில் நன்றி கூறாதது சூரியின் மேல் படிந்துள்ள களங்கம் என்பதில் ஐயமில்லை. இதே முறையில் தமது மாணவர்கள் யார் யார் என்பதையும் அவர் குறிப்பிடவில்லை. அவரது மாணவர்களில் மிகவும் புகழ்பெற்றவர் 'பிரௌத வியாகரணமு' 'சப்த ரத்னாகரமு' ஆகிய நூல்களை இயற்றிய பகுஜனபள்ளி சீத்தாராமாச்சார்யலு ஆவார். (இவற்றில் சப்தரத்னாகரமு நூல் அதிலுள்ள ஆரம்பகால இலக்கியச் சொல்லாட்சிகளுக்காகவும் அவற்றின் பொருளுக்காகவும் இன்றுவரை பாராட்டப்பட்டு மதிக்கப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்).

சின்னையா சூரி ஆங்கிலச் சொல்லான 'Will' என்பதை 'உயிலு' என்று தமது மொழிபெயர்ப்பில் கையாண்டுள்ளார். ஆனால் அவரே பின்னாளில் கடன்வாங்கி கலப்பு மொழிகளை உருவாக்குவதை முற்றிலுமாக எதிர்த்துள்ளார். தெலுங்குச் சொற்றொகுதியையும் சொல்லமைப்பையும் முழுமையாக வடமொழியாக்குதல் அல்லது பிராகிருதமாக்குதல் எனும் கொள்கைக்கு ஆதரவு தந்த சூரி, அம்மொழிச் சொற்களுடன் கூட, தெலுங்கு மொழிச் சொற்களைச் சேர்த்து சொற்கூட்டு உருவாக்குவதைத் தவிர்த்துள்ளார். அவரது இலக்கணப் பேராய்வு நூல், பெர்சிய-அராபிய மொழிகளிலிருந்தும்

ஆங்கிலத்திலிருந்தும் சொற்களைக் கடன்பெறுவது குறித்து எதுவும் குறிப்பிடாமல் மௌனம் சாதிக்கிறது. 14-ஆம் நூற்றாண்டின் 'தூய தெலுங்கு'ப் படைப்புகளில், வடமொழி இடம்பெற அனுமதிக்கப்படாத அக்காலத்திலிருந்தே பெர்சிய-அராபிய மொழிச் சொற்கள் இடம்பெற்று வந்துள்ளன. கடுஞ் சீர்திருத்தவாதியான அப்பகவி கூட, இலக்கியத்திலும், மொழியிலும் கலந்துள்ள அச்சொற்களைத் தவிர்த்தால் வியவஹாரஹானி அல்லது மொழித் தொடர்பு அற்றுப் போய்விடும் என்பதில் சமாதானமாக வாதிட வேண்டியிருந்தது. ஆனால் சூரியும் அவரது ஆதரவாளர்களும், அவரது பின்னோடிகளும் அவை பற்றி எதையும் குறிப்பிடாததால் ஆங்கிலத்திலிருந்து சொற்களைக் கடனாகப் பெறுவதை சூரி ஏற்றுக் கொண்டிருந்தார் என்று கூற முடியாது.

சூரியின் உடன்பாடற்ற இந்நிலைதான் அவரைப் பழைமை போற்றும் மரபிலக்கியவாதியாகவும், ஆரியம் அல்லாத எதனையும், அது சொல்லாக இருந்தாலும் சரி, பண்பாடு சார்ந்ததாயினும் சரி, அதன் எதிர்ப்பாளராகவும் மாறுவதற்கான பெருவிருப்பத்தைத் தந்திருக்க வேண்டும்.

ஒரு முரண்பாடு சூரியிடம் காணப்படுகிறது. சூரிக்குப் பல வகையிலும் உதவிசெய்து அவரது வாழ்க்கைக்கும் உயர்வுக்கும் நன்மைக்கும் காரணமாயிருந்த ஆங்கிலேய அலுவலர்களுடன் நெருக்கமாக ஒன்றியிருந்தவர், தமது படைப்புகள் எதிலும் ஆங்கிலேயர்களின் ஒரு சொல்லைக் கூட எடுத்தாளவில்லை. பிறருடைய விவகாரங்களில் தலையிட விரும்பாத மேதாவியான அவர், உறுதியான விருப்பு வெறுப்புகளையும் கொண்டிருந்தார். இதுவே அவரது தனித்தன்மையைக் காட்டுவதாக உள்ளது. சூரி பழைமைவாதி எனும் போர்வையில் தன்னுடைய தவறுகள் எதற்கும் வருந்தாத ஒரு பெரும் தந்நதிரவாதியாக இருந்திருக்க வேண்டும். அவர் சமயப் பணியில் மிகவும் ஈடுபாடு கொண்ட ஒரு மதவாதியாக இருந்தார் என்பதும் அவரது பண்புகளில் முக்கியமான ஒரு தன்மையாகும். உண்மையில் அவரது குழந்தைப் பருவம் ஒரு சமயப் பயிற்சிக் கூடத்திலேயே கழிந்ததால் அது அவரது மனத்தில அழியாத் தடமொன்றைப் பதித்திருக்க வேண்டும். அதிலும் கூட பிற மதங்களின் பால் அவருக்குள்ள சகிப்புத் தன்மை, அது வெளிப்படையாகத் தோன்றாவிட்டாலும் கூட, சந்தேகத்திற் கிடமாகவே உள்ளது.

பழம்பெரும் எழுத்தாளர்களான பால்குரிக்கி ஸ்ரீநாதர் அல்லது தூர்ஜதி போன்ற எந்தவோர் எழுத்தாளர்களிடமிருந்தும் ஓர் எடுத்துக்காட்டு கூட சூரியின் படைப்புகளில் காணப்படவில்லை.

வல்லின எழுத்துகளான க்க, ச்ச, ட்ட, த்த, ப்ப என்பவை க, ஸ, ட, த, வ என்று மாறுவது குறித்த சிறப்பு விதியை உருவாக்கிய சூரி, இது முன்னரே, வீர சைவ இலக்கியத்திலும், ஆதிகாலக் கல்வெட்டு எழுத்துகளிலும் இயல்பாகக் காணப்படுவதை அப்படியே ஏற்றுக்கொள்ள விரும்பாதவராகவே இருந்தார். சூரி தாமியற்றிய பொது விதிக்கு விலக்காக ஏதேனும் ஒரு சொல்லாட்சி இருந்தால், அதற்கு ஆதாரமாக 16-ஆம் நூற்றாண்டில், விஜயநகரப் பேரரசராக இருந்தவரும், விஷ்ணு சித்தியம், ஆமுக்த மால்யதா எனும் நூலை இயற்றியவருமான மன்னர் ஸ்ரீ கிருஷ்ண தேவராயரைத் துணைக்கழைத்துக் கொண்டார். மேற்குறிப்பிட்ட ஸ்ரீ கிருஷ்ண தேவராயரின் நூல் வைணவர்களால் மிகவும் போற்றப்பட்ட ஒன்றாகும். சூரியால் அலட்சியம் செய்யப்பட்ட சைவப் புலவர்கள் எல்லாம் நான்கு முதல் ஆறு நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட காலத்தினராவர். அதே போல், தெலுங்குச் சொற்களில் காணப்படும் உயிர்நெடிலையடுத்து 'ர'கரம் (அனுஸ்வரம்) இடம் பெறுவதையும் சூரி மறுத்துள்ளார். ஆனால் இம்மாதிரியான நிகழ்வுகள் 11-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிலும் 12-ஆம் நூற்றாண்டில் நன்னிகோடா எனும் ஒரு வீர சைவ எழுத்தாளரின் குறிப்புகளிலும் காணப்படுகின்றன. இதிலிருந்து, எழுத்தாளர்களில் ஒரு பிரிவினரை அவர்கள் எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும் சமய அடிப்படையில் (எதிரணியிரைச்) சகித்துக் கொள்ளும் பண்பு சூரியிடம் இருந்ததாக நம்ப முடியவில்லை.

ஒருவேளை இதே காரணத்தால்தான் **ஸ்மார்த்த** பிரிவைச் சேர்ந்த பட்டாபிராம சாஸ்திரி, குருமூர்த்தி சாஸ்திரி, புதூரி சீத்தாராம சாஸ்திரி ஆகியோரை சூரி ஆதரிக்கவில்லை போலும்! சூரி வெளிப்படையாக இவர்களில் ஒருவரையோ அல்லது எல்லோரையுமோ எதிர்த்ததில்லை. ஆனால் அவர்களைப் பற்றியும் இலக்கிய வட்டாரத்தில் அவர்களுக்கிருந்த முக்கியத்துவத்தையும் கண்டுகொள்ளவில்லை.

இந்திய மரபிலக்கியாவதிகள் பலரும் மொழிவரலாற்றுக்கும், வரலாற்றுண்மை கொண்ட எந்த நிகழ்வுக்கும் உரிய மதிப்பைத் தராத நிலையில், சூரியும் அவ்வாறு நடந்து கொண்டது ஒரு மன்னிக்கக்கூடிய குற்றமேயாகும்! இதேபோல் மன்னிக்கக்கூடிய தவறுகள்தாம், எழுத்து வடிவத்தை ஒலியோடும், எழுத்துக் கூட்டுகளை ஒலியியல் தன்மைகளோடும் இணைத்து அவர் குழப்பத்தை உருவாக்கிய செயல்களும்! சூரிக்கு முன் வாழ்ந்த எல்லா இலக்கண ஆசிரியர்களுக்கும் இருந்த பொதுவான ஓர்

இயல்புதான் அது என்பதால் சூரி மட்டும் அதற்கு விதிவிலக்கல்ல. என்றாலும் பொருளற்ற இரு அம்சங்களில் மட்டும் அவர் மிகவும் பிடிவாதக்காரராக இருந்து அவற்றை ஆதரித்ததுதான் மிகவும் வியப்பாக உள்ளது.

முதலாவது,

அவரது காலம் வரை எழுத்துச் சுருக்க முறையில், எப்போதும் நடைமுறையில் இல்லாத, பூஜ்ஜியத்தின் இடது அரைப்பாதி வடிவமான ஓர் எழுத்துக் குறியீட்டைப் பயன்படுத்துவதில் அவர் கொண்டிருந்த பெருவிருப்பாகும்.

ஆனால் அது தெலுங்கு எழுத்தியலில் முழு உருவப் பகுதியாகவே இடம் பெற்றிருந்தமையை அப்பகவி(1656) யின் வெளிப்படையான குறிப்புகள் காட்டுகின்றன. தெலுங்கு எழுத்துகளின் வரிவடிவங்களை அமைத்துக் காட்டும்போது அவர் அர்த்தானுஸ்வாரம் அல்லது அரைமூக்கொலிகளை ஒன்றாகவே குறிப்பிட்டுள்ளார். இதில் ஆய்வுக்குட்படும் அறிஞர்களைக் குழப்புவது என்னவெனில், சூரி குறிப்பிட்ட எழுத்துகளின் வரி வடிவங்கள் எதுவும் கிறித்துவ சகாப்தத்தின் தொடக்கம் முதல் 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அச்சுப் பணிகள் தொடங்கிய காலம் வரை எங்கும் எதிலும் இடம் பெறவில்லை என்பதுதான்!

சின்னையா சூரி வேண்டுமென்றே பிடிவாதமாகத் திணித்துள்ள 'எழுத்துப் போலி' யானது, எந்தப் பாறைக் கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும், பனை ஓலைச் சுவடிகளிலும், காகித எழுத்துகளிலும் எப்போதும் இடம் பெற்றதில்லை. ஆனால் அவரது ஆதரவாளர்கள் அதைப் பெரிதாக விவாதித்து வேண்டுமென்றே உரிமையோடு கையெழுத்துப் பிரதிகளிலும், அச்சிட்ட நூல்களிலும் பயன்படுத்தி வந்துள்ளனர்.

வரலாற்றின் அடிப்படையிலும் ஒப்பீட்டின் அடிப்படையிலும் நோக்கும்போது இவ் 'எழுத்துப் போலி'யானது முன் செல் உயிர் ஒலி மூக்கொலியாவதேயன்றி வேறல்ல. இவ்வாறு நிகழ்வதை உருபொலியன் (Morphophoneme) என்று குறிப்பிடுவதுண்டு. இதே போல் 8-ஆம் நூற்றாண்டியிலேயே பொருளற்ற ஒலியாகிவிட்ட 'ற'கரத்தை (trill) எழுத்தியலில் கொண்டுவந்து சேர்க்க கடும் முயற்சிகளைச் செய்துள்ளார். இவ் வருடொலியைப் பயன்படுத்தியதால் தெலுங்கு மொழி எழுத்தாளர்களிடையே

பெரும் குழப்பம் ஏற்பட்டது. இதில் அப்பகவியின் பரிகசிப்புக்கு ஆளானவரும், மகாபாகவதத்தின் ஆசிரியருமான போதனர் போன்ற பெரும் எழுத்தாளர்கள் கூட குழம்பிப் போயினர்.

மேலெழுந்தவாரியாக நோக்கும்போது, ஒரு வைணவரான போதனரையும் சூரி புறக்கணித்துள்ளார் என்பது, வைணவ எழுத்தாளர்களுக்கு ஆதரவாக சூரி தவறிழைத்தார் என்று முன்பு குறை கூறியதற்கு நேர் மாறாகத் தோன்றலாம். ஆனால் சூரியின் செயலில் ஒரு சூட்சுமம் இருப்பதாகத் தெரிகிறது. அதாவது கிருஷ்ண தேவராயரைப் போலன்றி, போதனர் பிராமண வகுப்பைச் சேர்ந்தவர் மட்டுமல்ல, அவரது இளமைக் காலத்தில் வைணவராக மாறுவதற்குமுன் சைவக் கருத்தைக் கொண்ட 'வீரபத்திர சரிதம்' எனும் நூலை இயற்றியவருமாவார்.

அதே போல்,

மேற்கூறிய குற்றம் காரணமாகவே, தெலுங்கில் உள்ள ஐம்பெரும் இலக்கியங்களில் ஒன்றாகக் கருதப்படும் 'பாண்டுரங்க மகாத்மியம்' எனும் வைணவ நூலை இயற்றிய தெனாலி இராமகிருஷ்ணர் பற்றி மறைமுகமாகக் கூட சூரி குறிப்பிடவில்லை.

மேற்கூறிய எடுத்துக்காட்டுகளின் மூலம் வெளித்தோற்றத்தில் சூரி எப்படியிருந்தாலும், எப்படிப் பழகியபோதிலும், தனது சமயப் பற்றில் மிகவும் பிடிவாதக்காரராகவும், அதைப் பின்பற்றுவதில் மிகவும் கவனமாக இருந்து, பிற சமயத்தினரை மதிக்காதவராகவே நடந்து கொண்டார் என்பது தெள்ளத் தெளிவாகிறது. இதுவே சூரி என்கிற ஒரு தனிமனிதரின் பண்பு- குணநலன்களில் இருந்த பலமும் பலவீனமும் ஆகும். அவரது இத்தகைய ஒத்துப்போகாத ஈவிரக்கமற்ற நடவடிக்கைகளால்தான், அவர் மீது கடுமையான, இரக்கமற்ற எதிர்ப்புகள் எழலாயின. ஒருவர் இறந்தபின் அவரது குற்றம் குறைகள், பகைமையுணர்வுகள் யாவும் மறக்கப்பட வேண்டும் என்னும் இந்திய மண்ணின் மரபையும் மீறி சூரியின் மேல் அவர் இறந்தபின்பும் கூட எதிர்ப்புகள் நிலைத்துள்ளன என்பது துரதிர்ஷ்டமான ஒன்றுதான்!

சிறந்த கவிஞரும் திரைப்பட எழுத்தாளருமான தபி தர்மராவ் என்பவர் 1955-ல் 'சூரி மரணம் அல்லது பந்திரா பல்லக்கி' எனும் நாடகத்தை எழுதினார். ஐந்தாண்டுகளுக்குள் இரண்டாம் பதிப்பைக் கண்ட இந்நாடகத்தின் தலைப்பு,

''**சூரியின் மரணம்** அல்லது **'ற' வடிவில் அமைந்த பல்லக்கு'** என்று பொருள்படுகிறது.

இந்த நாடகம், யாரும் கவனிப்பாரின்றி சூரி படுக்கையில் கிடப்பதாகத் தொடங்குகிறது. அப்போது அவருடைய விதவை மகளும் சூரியின் சீடர்களும் சொற்களின் இறுதியில் உள்ள கட்டாயமற்ற 'ன' கரம் குறித்த விவாதத்தில் ஈடுபட்டிருந்தனர்.

இந்நாடகத்தில் மூன்று பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

முதல் பாடல்,

சூரி பயன்படுத்திய விகுதிகள், கலைச் சொற்கள் போன்றவற்றைக் குறிப்பிட்டும் அவற்றின் மங்கலான எதிர்காலம் குறித்தும் சூரியின் மாணவர்கள் பாடும் இரங்கற்பாவாக அமைந்துள்ளது.

இரண்டாவது பாடல்,

சூரியின் ஆதரவாளர்கள் அவரது சடலத்தைச் சுமந்து கொண்டு ஒப்பாரி வைத்து ஓலமிடுவதன் பின்பாட்டாக அமைந்துள்ளது. இதனை ஆசிரியர் ''சகட ரேப பலியங்கிகா அல்லது அர்த்தானுஸ்வாரால அனந்த சயனம்'' என்று குறிப்பிடுகிறார். அது சூரியின் மரண அறிவிப்பையும், அவரது மரணம் மொழியின் வளர்ச்சிக்கு நல்கிய நல்வாய்ப்பு பற்றியும் தெரிவிக்கிறது.

மூன்றாவது பாடல்,

அவரது ஆன்மாவுக்கு கடைசி ஆறுதல் கூறுவதாக அமைந்துள்ளது. அந்த ஆன்மாவின் தனிமை வருத்தமளிக்காது. ஏனெனில் அவரது சேருமிடம் தெரியாத பயணத்தில் துணையாக அவர் தமது இலக்கண நூலில் பயன்படுத்திய எழுத்துப் போலிகளும், சொல்லாட்சிகளும், புதிய உத்திகளும் உடன் செல்கின்றன என்றும் அப்பாடல் விவரிக்கிறது.

இந்நாடகம் மிக மோசமான கலைநயத்துடன் படைக்கப் பட்டுள்ளதெனலாம். அதே நேரத்தில் அறிஞர்களிடையே அவரது இறப்புக்குப் பின்னரும் சூரி ஏற்படுத்திய பகை-வெறுப்புணர்ச்சியின் தீவிரத்தையும் அதன் காரணமாக ஏற்பட்ட மிக மோசமான எதிர் விளைவுகளையும் உரக்கக் கூறி வெளிப்படுத்துவதாகவும் இப்படைப்பு அமைந்துள்ளது.

சூரியின் காலத்தில் பண்டைய இலக்கியங்களில் ஒரு சிலவே வெளியிடப்பட்டன. அப்போது மொழியியல் ஆய்வும் கையெழுத்துப் பிரதிகளைத் திருத்தியமைத்தலும் கருவுறு நிலையிலேயே இருந்தன. மேலும் மேலும் பண்டைய இலக்கியங்களும், ஆரம்பகால எழுத்தாளர்களின் படைப்புகளும் வெவ்வேறு பதிப்புகளாக வெளிவந்தபோது, அவை அனைத்தையும் அறிஞர்கள் காண நேர்ந்தது. அப்போதுதான் சூரியும், ஆர்வத் துடிப்பும் பற்றும் வெறியும் மிக்க அவரது சீடர்களும் பண்டைய இலக்கியங்களைச் சூரியின் இலக்கண விதிகளுக்கேற்றவாறு மாற்றியும் திருத்தியும் சிதைத்தும் செய்த தவறுகள் யாவும் வெளிச்சத்துக்கு வந்து பரவலான எதிர்ப்பும் கண்டனங்களும் உருவெடுத்தன. அவர்கள் 'பரிஷ்கர்த்தர்கள்' (தீர்ப்பளிப்பவர்கள்) எனப்பட்டனர். சூரியைப் புகழ்வதற்குப் பதிலாக அவரைச் சீற்றத்துடன் கண்டனம் செய்வதில்தான் பல அறிஞர்களும் செயல்பட்டனர்.

வேதம் வேங்கடராய சாஸ்திரி (1853-1929) என்பவர் அக்காலத்திய பெரும் எழுத்தாளர்களில் முதன்மை எழுத்தாளர். அவர் 'நாகாநந்தமு' எனும் நாடகமொன்றை 1895-ல் எழுதி வெளியிட்டார். அதில் சூரியால் புறக்கணிக்கப்பட்ட, சாதாரண பேச்சு வழக்கு மொழியை, முதன் முதலாக சாதாரண பாத்திரங்கள் (நீச பாத்திரங்கள்) பேசுமாறு எழுதியமைத்திருந்தார். இது பெரும் எதிர்ப்பையும் ஆதரவையும் ஒருசேர எழுப்பிவிட்டது. அறிஞர்கள் உலகமே இரு கூறானது; பெரும் அறிஞரான வேங்கடராய சாஸ்திரியே கூட, இந்த நாடகத் தொடர்பான விஷயத்தைத் தவிர, சூரியின் ஆதரவாளர்தான்! அவர் வடமொழி நாடகங்களில் பிராகிருதப் பேச்சு வழக்கு மொழிச் சொற்கள் இடம் பெறுவதைப் போல இங்கும் பேச்சு மொழி இடம்பெற வேண்டும் என்று விரும்பினார். இதன் தொடர்பாக சூரியின் இலக்கண மரபுக்கு ஊறு நேர்ந்துவிட்டதாகக் கூறி அது குறித்து விவாதிக்க 1898 டிசம்பரில் சென்னையில் அறிஞர்கள் மாநாடு ஒன்றும் கூட்டப்பட்டது. இதுபோல் மரபை மீறுவது கண்டனத்துக்குரியது என்று ஒருபுறம் பேசப்பட்டு வந்தபோதிலும், ஏராளமான படைப்பாளிகள் வேங்கடராய சாஸ்திரியின் மரபினைப் பின்பற்றி எழுதலாயினர்.

1897-ல் வெளிவந்த இரு பெரும் படைப்புகள் எழுத்துலகில் ஒரு பெரும் மாற்றத்தை உருவாக்கிவிட்டன. அதில் ஒன்று குரஜட வேங்கட அப்பாராவ் எழுதிய காலத்தை வென்று புகழ்பெற்று நிற்கும் நாடகமான 'கன்யாசுல்கம்' என்பதாகும். இந்நாடகம் சூரி

வகுத்த இலக்கிய வடிவங்களுக்கு மாறாக முழுக்க முழுக்கப் பேச்சு வழக்கு மொழியிலேயே அமைந்தது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இரண்டாவது நூல், கிடுகு வேங்கட ராமமூர்த்தி என்பவர் எழுதிய 'ஆந்திர பண்டித பிசக்குல பாஷா பேஜமு' எனும் ஆய்வுக் கட்டுரை ஆகும். இதில் சூரியின் சீடர்கள் பயன்படுத்திய இலக்கணமில்லாச் சொற்களைப் பட்டியலிட்டுக் காட்டி, காட்டமாகக் கண்டனமும் செய்யப்பட்டிருந்தது. இது ஒரு பெரும் சர்ச்சைக்கு வழி வகுத்து 1910 முதல் ஒரு எதிர்ப்பினைத் தோற்றுவித்துவிட்டது. இப்புதிய பரம்பரைத் தலைவர்கள், வங்காளத்தில் இரவீந்திரநாத் தாகூர் ஆதரவு தந்த 'கலித் பாஷா' (Calit Bhasha) புரட்சியால் தூண்டப்பட்டு, சூரி உருவாக்கிய மரபுக்கு எதிர் இயக்கம் ஒன்றைத் தோற்றுவித்தனர்.

அவர்கள் கீழ்க்காணுமாறு தங்கள் வாதத்தை முன்வைத்தனர்:

1. அன்றாட பேச்சுவழக்கு மொழி நடையில் எழுதப்படும் உரைநடை நூல்களையும், அறிவியல் நூல்களையும், அறிஞர்களின் சிறப்புரைகளையும், அதுபோன்றவற் றையும் கொண்டுவரும் மரபு திருத்தப்படவோ தடுக்கப்படவோ கூடாது.

2. அறிவியல் அறிவையும், வளரும் புதிய துறைகளின் அறிவையும் பரவச் செய்வதில் தற்காலப் பேச்சுவழக்குதான் பெருமளவில் பயன்தருமே தவிர சூரியின் பண்டைய இலக்கியநடை பயன்தராது.

3. இக்காலத்திய பெரும் கல்வியாளர்களால் கூட பயன்படுத்த இயலாத, கடினமான ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மொழிவடிவத்தை மாணவர்கள் புரிந்து கொண்டு கற்று, பயன்படுத்திட இயலாது.

கிடுகு வேங்கட ராமமூர்த்தி எனபவர், சமகால எழுத்தாளர்களான சூரியின் தீவிர ஆதரவாளர்கள் பயன்படுத்தி செம்மொழி இலக்கியம் சாராத சொற்களைச் சுட்டிக்காட்டி, சூரியின் இலக்கண விதிகள் எந்த அளவுக்கு வரலாற்று உணர்வு நேர்மைக்கும் உண்மைக்கும் மாறாபாடாக உள்ளன என்பதையும் எடுத்துக் காட்டி, இப்படிப்பட்ட புராதனவிதிகள் புகுத்தப்படுமானால் இலக்கியத்தில் படைப்புத் தன்மையே பாழ்பட்டுவிடும் என்று எச்சரித்தார்.

சூரியின் எதிர்ப்பாளர்கள் குழுக்களாகக் கூடி போட்டிச் சங்கங்களை உருவாக்கினர். அவற்றில் இரு சங்கங்கள், மாணவர்களுக்காக சூரியால் வகுக்கப்பட்ட மரபுத்துவ இலக்கண விதிகளை மாற்றியமைக்க வேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்திக் கிளர்ச்சி செய்து வந்தன. மரபிலக்கியப் போக்கையும் பேச்சுவழக்கு நடையையும் ஆதரித்தும் எதிர்த்தும் பல்வேறு நூல்களும் வெளிவரலாயின. பொதுக் கூட்டங்கள் நிகழ்த்தப்பட்டன. அரசுக்கும் பல்கலைக் கழகத்திற்கும் கோரிக்கை விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டன. இறுதியில், சூரியின் ஆதரவாளர்கள் 1924-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 13 ஆம் நாள் சூரியின் விதிகளைக் கைவிட ஒப்புக் கொண்டனர். இல்லையேல், சூரி போதித்து, நடைமுறைப்படுத்தி வந்த கொள்கைகள் மக்களின் பேச்சு மொழியில் இருவேறு வழக்குமொழிகள் உருவாகும் நிலையை ஏற்படுத்தியிருக்கும். இலக்கியப் பரப்பிலும் கல்விப் பரப்பிலும், நிர்வாகத் துறைகளிலும், அவரது மரபின் தாக்கம் புதிய ஆராய்ச்சிகள், புதிய படைப்புகளுக்கு உயிர் கொடுக்காது அழித்திருக்கும். சூரியின் கடுமையான விதிகளை ஒதுக்கி வைத்துத் தடை செய்ததன் மூலம் ஒரு பேரழிவு தவிர்க்கப்பட்டது. என்றாலும், இலக்கிய உலகையும் கல்வித் துறைகளையும் ஒன்றேகால் நூற்றாண்டுகளுக்கு மேல் சூரி ஆட்சி புரிந்துவந்தார் என்ற பெருமை அவருக்குண்டு. மேலும், அவர் தோற்றுவித்த ஒரு புதிய மரபை உடைத்தெறிவதற்கு, பேரறிஞர்கள், தகவல் தொடர்புச் சாதனங்கள், ஏராளமான இலக்கியப் படைப்பாளர்கள் ஆகியோரின் ஒட்டுமொத்த வலிமையும் தேவைப்பட்டது என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

1855-ல் மொழி வளர்ச்சிக்காக ஒரு நெறிமுறையை வகுத்துக் கொடுத்து, இலக்கியத்தின் சர்வாதிகாரியான சூரி, இலக்கியத்தின் போக்கையே ஓர் ஆயிரம் ஆண்டுக் காலத்திற்குப் பின்னுக்குத் தள்ளி, தாம் இறந்த பின்னும் கூட ஐம்பதாண்டுக் காலத்துக்கு அதன் இயல்பான ஓட்டத்தை மாற்றி அமைத்தவர். மேலும் ஐம்பதாண்டுக் காலத்திற்குப் பிறகும் இன்றும்கூட அவரைப் போற்றிப் பின்பற்றும் பரம்பரை ஒன்றைக் கொண்டிருப்பதால் சூரியின் சாதனை குறிப்பிடத்தக்க வொன்றுதான் என்பதில் ஐயமில்லை.

# 5
# சூரியின் இலக்கியப் பங்களிப்பு

தெலுங்கு இலக்கியத்திற்கு சின்னையா சூரியின் பங்களிப்பு குறித்தும், மொழி வரலாற்றில் அவர் எத்தகைய இடத்தைப் பிடித்துள்ளார் என்பது குறித்தும் நடுநிலையில் நின்று காண வேண்டுமானால், அவரது படைப்புகளை நன்கு மதிப்பிட்டு அவற்றிலுள்ள குறைகளையும், நிறைகளையும் கண்டறிந்து, அவரது காலத்திய தெலுங்கு இலக்கிய வரலாற்றின் ஒட்டுமொத்தச் சூழலில் சூரியின் தனிமனிதப் பண்புகளையும் முதலில் ஆராய்வது அவசியமாகும்.

சூரி ஒரு சமயப் பற்றாளர்; பக்திமான்; வைணவ மதத்தைச் சார்ந்தவர்; கடின உழைப்பாளர் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடில்லை. சூரி தன் முயற்சியாலேயே உயர்ந்த ஒரு மாமனிதர்; ஆம்! பதினாறாம் வயதளவில்தான் மூன்று அடிப்படைக்கல்வி எனும் எழுத்தறிவு, படிப்பறிவு, கணக்கறிவு ஆகியவற்றைக் கற்கத் தொடங்கி, மிகவும் குறுகிய கால அளவில் இருபது ஆண்டுகளுக்குள், அவரது காலத்திய முன்னணி அறிஞர்களிடையே ஒரு பெரும் மதிப்பிடத்தை அவரால் பெற முடிந்தது. அவருக்கு இழைக்கப்பட்ட அவமானங்களையும் சமூகத் தீங்குகளையும் இன்னல்களையும் மௌனமாகத் தாங்கிக் கொண்டார். புராதனமான எதன்மீதும் அவருக்கேற்பட்ட

கவர்ச்சிக்குக் காரணம், வடமொழிப் புலமையும், பழைமை போற்றலும் உயர்சாதியினருக்கே உரித்தான உரிமைக் கோட்டை என்றிருந்த நிலையை முறியடித்து, அதற்குள் தாமும் நுழைய வேண்டும் என்னும் தீராத ஆசையின் விளைவுதான்! பெரும் அர்ப்பணிப்பு முயற்சிகளுக்குப் பிறகே இவ்விரு தன்மைகளையும் அவர் பெற நேர்ந்தது.

சூரி தன் மனதில் எவ்விதப் புதிய கருத்துகளும் உருவாவதற்கு இடந்தரவில்லை; அவரது கருத்துகளுக்கு ஒத்துவராத எதனையும் எவரையும், சமுதாயத்தில் தனது உயர்ச்சிக்கு உதவியாக இல்லாத யாரையும் தன்னிடம் நெருங்கவிடவில்லை. இந்தச் சோதனையில் அவர் தன்னையே தனிமைப்படுத்திக் கொண்டு, தன்னைச் சுற்றி என்ன நிகழ்கிறது என்பதைக் கண்டுகொள்ளாமலேயே இருந்தவர். விரைந்து செல்லும் உலகில் வாழும் பெரும்பாலான மக்களின் தேவையைப் பற்றி அவர் ஒருபோதும் கவலை கொண்டதில்லை. பேரகராதி, இலக்கியம், இலக்கணம் ஆகிய பரப்பு எல்லைகளுக்குட்பட்ட சின்னஞ் சிறிய உலகம் மட்டுமே அவருக்குப் பொருட்டாக இருந்தது.

நாட்டு மக்களின் சமூக, அரசியல், பொருளாதார விடுதலை என்பதெல்லாம் உண்மையில் என்னவென்றே சூரிக்குத் தெரியாது. அவை அவர் அறியாத அரிய விஷயங்களாகும். நமக்குத் தெரிந்தவரை அவர் சென்னையை விட்டு வேறெங்கும் சென்றதில்லை. பேச்சு வழக்கு மொழியைக் கொண்ட சமுதாயம் என்றால் என்னவென்றோ அல்லது அவர்களைப் பற்றிய எந்தவிதமான செய்தியோ அவருக்குத் தெரியாது; அவர்களுடன் அவருக்கு எவ்விதத் தொடர்பும் இருந்ததில்லை; அதற்காக அவர் கவலைப்பட்டதுமில்லை.

ஒருவேளை, தனது சொந்த சாதிமக்களைத் தவிர, தான் வாழும் சமுதாயத்திலிருந்தே ஒதுங்கித் தனிமையாக இருக்கும் மனிதன், அவனது பக்தர்களால் வேண்டுமானால் 'மாமுனிவர்' என்று கருதப்படலாம்; ஆனால் வெளியுலகம் அவனை இயல்பாகவே புறக்கணித்துவிடும். சூரியின் சிறிய வட்டத்துக்கு வெளியேயுள்ள சமுதாயத்தில் அவருக்குள்ள இடம் வெறும் வெற்றிடம்தான்; அல்லது பூஜ்ஜியத்தைவிடச் சிறிது அதிகமாக இருக்கலாம். இந்தக் குறைபாட்டைச் சமன்செய்ய சூரி முயற்சித்தார்; அவருக்கு ஆதரவாயிருந்த அதிகார வர்க்கத்தினரைக் கொண்டு, அவர்களின் செல்வாக்கால் தனது கருத்துகளை மற்றவர்கள் மீது திணிக்க

முயன்றார்; தமது முயற்சியில் சூரி வெற்றியும் கண்டார். அவரது வெற்றி சமுதாயத்தில் ஒரு நாசகரமான விளைவை உருவாக்கிவிட்டது. அதனால்தான் அவர் வெறுக்கப்பட்டார்; பரிகசிக்கப்பட்டார்; ஒரு கொள்ளை நோயைப் போல் ஒதுக்கி வைக்கப்பட்டார்; அவருக்கு ஆதரவாக இருந்த அதிகார வர்க்கத்தினர் மனம் மாறியவுடனேயே முற்றிலுமாகத் தோற்கடிக்கப்பட்டார். இது அவரது சிறப்பியல்பில் உள்ள ஒரு பெருங்கறையாகும்.

இறந்தபின் சில பத்தாண்டுகள் வரை சூரி தெய்வப் பிறவியாகவே கருதப்பட்டார். சூரியால் சாதிக்க முடியாது பணி என்று எதுவுமே இல்லை என்று அறிஞர்களில் ஒரு சாரார் நம்பினர். ஆகையால், ஆசிரியர் பெயர் தெரியாத படைப்பு ஏதேனும் இருந்தால் அது அவர்களுக்குத் தெரிந்த ஒரே மாமேதையான பரவஸ்து சின்னைய்யா சூரியின் படைப்புதான் என்று கற்பித்துக் கொண்டனர். இவ்வாறு, பட்டாபிராம சாஸ்திரி எழுதிய நூலான 'ஆந்திர தாது மாலா'வை சூரியின் நூல்தான் என்று கருதி வெளியிட்டு, அதில் ஏதோவொரு புகைப்படத்தையும் சூரியின் புகைப்படம்தான் என்று நினைத்து வெளியிட்டும் விட்டனர். இந்த ஏமாற்று மோசடி உடனடியாகக் கண்டுபிடிக்கப்பட்டு, அப்புகைப்படம் இலக்கிய விமர்சகரான தஞ்சை நகரம் தேவப் பெருமாளையாவினுடையது என்றும் நிரூபிக்கப்பட்டது.

சி.பி. பிரௌன், ஒரு மொழிநூல் வல்லுநராகவும், சொற்களஞ்சிய ஆசிரியராகவும், இலக்கிய விமர்சகராகவும், மொழிப்பாடத் திட்ட வல்லுநராகவும், ஆட்சிப் பொறுப்பாளராகவும் பெரிதும் மதிக்கப்பெற்றவர். இருபதுக்கும் மேற்பட்ட இம்மண்ணின் அறிஞர்களை ஆதரித்து ஊக்குவிக்கும் புரவலராகவும் பிரௌன் விளங்கினார். அவ்வறிஞர்களின் கடும் உழைப்பால்தான் பிரௌன் பல தெலுங்கு இலக்கியங்களைப் பதிப்பித்து வெளியிட்டார். சூரியின் பற்றாளர்கள் பிரௌன் கூட சூரியின் மாணவர்தான் என்று கூறுமளவுக்குப் போய்விட்டனர். ஏனெனில் சூரியைத் தவிர வேறெவரும் அந்த அளவுக்குக் கற்பித்திருக்க இயலாது என்று அவர்கள் நம்பினர்.

ஆனால், 1840-ல் பிரௌன் சூரியை இன்னொருவர் மூலமாக பணியமர்த்திக் கொண்டார் என்பதும், அவரை சூரி என்னும் பட்டப்பெயர் இன்றி அவரது சாதிப்பெயரால் இரண்டு முறை குறிப்பிட்டுள்ளார் என்பதும் எழுத்து பூர்வமான சான்றுகள் மூலம்

ஐயமின்றி உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. மேலும் குருமூர்த்தி சாஸ்திரியை ஒரு மேதை என்று புகழ்ந்தும், தனக்கு கல்வி போதித்த, அவருடன் விவாதங்களில் கலந்து கொண்ட, எந்த வகையிலாவது அவருக்கு உதவிகரமாக இருந்த அனைவருக்கும் மரியாதை செலுத்தியும் எழுத்துபூர்வமாக பிரௌன் குறிப்பிட்டுள்ளதிலிருந்து, பிரௌனுக்கும் சூரிக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லையென்றும், சூரிக்கு பிரௌன் எவ்விதத்திலும் நன்றிக்கடன் பட்டிருக்க வில்லையென்றும் தெரிகிறது. மேலும் மற்ற பிற ஆங்கிலேய இலக்கண ஆசிரியர்கள், சொற்களஞ்சிய ஆசிரியர்களைப் போலவே, சூரியின்பால் உயர்மதிப்பு ஏதும் கொண்டிருக்கவில்லையென்றும் தெரிகிறது.

சூரியின் ஆதரவாளர்கள், அரசாங்கம் சின்னையாவின் மேதைமையையும், அவரது சிறப்பான பணியையும் அங்கீகரித்து 'சூரி' என்ற பட்டத்தையும் இலண்டனிலிருந்து தருவிக்கப்பட்ட இரண்டு தங்கக் காப்புகளையும் அளித்துச் சிறப்பித்தது என்று கூறிக்கொண்டனர். ஆனால் இது பச்சைப் புளுகு என்று பின்னர் தெரிந்தது. 'சுஜன ரஞ்சனி' என்னும் இதழைத் தமது சொந்த அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டவர் என்றும், ''சிறந்த பத்திரிகையாளர்'' என்றும் சூரி புகழப்பட்டுள்ளார். ஆனால் இந்தப் பத்திரிகையின் முதல் இதழே சூரி இறந்து மூன்றாண்டுகளுக்குப் பின்னர்தான் வெளிவந்தது; அந்த முதல் இதழ் தற்போது கிடைத்துள்ளது. சூரியின் பின்முறையினர் மூன்றுபேர் அதன் ஆசிரியராக இருந்திருக்கிறார்கள்.

சூரி எழுதியதாகக் கூறப்படும் ஓர் அகராதி உள்ளது. ஆனால் சூரியின் விசுவாசிகள் இப்போது கூட அதைப் பதிப்பித்து வெளியிட விரும்பவில்லை. அவ் வகராதி, சூரியின் மாணவர்களில் ஒருவரும், 'சப்தரத்னாகரமு' நூலின் தொகுப்பாசிரியருமான பகுஜனபள்ளி சீத்தாராமாச்சார்யலுவால் சூரியிடமிருந்து திருடப்பட்டது என்று வலியுறுத்துகின்றனர். இது உண்மைக்குப் புறம்பான கட்டுக்கதை என்று நாம் முன்பே கூறியுள்ளோம்.

இவ்வாறான பொய்க்கூற்றுகள் எல்லாம் ஒரு மாமேதை என்று புகழப்படும் மனிதரின் நிலையை உயர்த்துவதாக இல்லை. என்றாலும் அவர்களின் மனத்தில் அழியா இடம் பிடித்துள்ள தன்மையை நாம் பாராட்டத்தான் வேண்டும்.

சூரியின் 'நீதி சந்திரிகா' எனும் நூல், பள்ளி மாணவர்களுக்கான பாடநூல் என்பதைத் தவிர, இலக்கியவகை என்ற முறையில்

பாராட்டைப் பெறவில்லை. மற்றபடி அவரது சோதனை முறையிலான பிற எழுத்துப் பணிகள் எதுவும் குறிப்பிடும்படியாக இல்லை.

சூரியின் நூல்களுள், ஐயத்திற்கிடமில்லாப் பெரும் படைப்பாய் விளங்குவது 'பாலவியாகரணமு'. ஆனால் அதன் தலைப்பு அந்நூலின் தன்மையைக் குறைத்துக் காட்டுவது போல் உள்ளது. அதாவது பாலர்களால் (இளைஞர்களால்) புரிந்து கொள்ளக் கடினமாய், வடமொழி இலக்கணப் புலமையுடைய அறிஞர்களால் மட்டுமே புரிந்து கொள்ளக் கூடியதாய் அந்நூல் அமைந்துள்ளது. தெலுங்கு இலக்கண அமைப்பை வடமொழி இலக்கணச் சட்டகத்துக்குள் புகுத்துவது பற்றியோ, அல்லது வடமொழி இலக்கண வாயிலாகவே தெலுங்கு இலக்கணத்தை வரையறை செய்வது பற்றியோ சூரி கவலைப்படாமல் இப்பெரும் படைப்பை ஆக்கியுள்ளார்.

தெலுங்கு மொழியின் கட்டுக்கோப்பைச் சிதைத்தும், நீட்டியும், குறுக்கியும் ஒரு புதியச் சட்டகத்திற்குள் தயக்கமில்லாமல், அதே சமயம் புரிந்து கொள்ளுமளவுக்கு விளக்கமாகவும் சூரியால் செய்ய இயலும் என்பதால்தான் மரபிலக்கியவாதிகள் அவர் மீது பற்று கொண்டனர். இந்நூலை வடமொழியில் மொழி பெயர்த்து மேலும் பெருமைப்படுத்தும் நோக்கில், சிஸ்து கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி (1800-1870) என்பவர் இதைச் செய்யுள் வடிவில் வடமொழியில் எழுதினார். அக்காலத்தில் இப்படிப்பட்ட அருஞ்செயல்களைப் புரிவதில் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி மிகவும் புகழ்பெற்றவராக விளங்கினார். ஒரு சமயம், ஓர் இளவரசர் ஒரு குறிப்பிட்ட குதிரையை, அதன் உடல் அமைப்பு சரியாக இல்லை என்று அரசவைப் புலவர்கள் கூறிய பின்னும், அதை வாங்கிவிட வேண்டும் என்று விரும்பியபோது, இளவரசர்க்கு குதிரையின் இலட்சணங்களைத் தெரிவித்து அவரை மகிழ்விக்கும் பொருட்டு, ஒரே இரவில் அஸ்வ சாஸ்திரம் என்னும் குதிரை வளர்ப்பு அறிவியல் நூலை கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி எழுதினார். சாஸ்திரியின் 'ஹரிகாரிகாவலி' என்னும் நூல் சொல்லுக்குச் சொல் மொழி பெயர்ப்பாக அமைந்த நூலாகும். தமது அரிய முயற்சியை அவர் எப்படி இந்த ஆசிரியருடையது என்று கூறியிருப்பார் என்பது யூகத்தின் அடிப்படையில் இப்போது நம்முன் எழும் வினாவாகும். ஆனால், சூரியின் எதிரியான கல்லூரி வேங்கடராம சாஸ்திரி மிகவும் சினங்கொண்டிருந்த போது அவரது கைகளில் இந்த நூல் கிடைத்ததால், அதைச் சூரிக்கு எதிராகக் கையாளும் ஒரு வலிய ஆயுதமாக எடுத்துக் கொண்டு விட்டார்.

இவ்வாறு குறிப்பிடுவதுதான் இப்பூசலுக்கு ஒரு வகையில் நியாயமான விளக்கம் தருவதாக இருக்கும். ஆனால் வேங்கடராம சாஸ்திரியின் பிடிவாதமான வாதம் காரணமாக இவ்வழக்கு மிகவும் சிக்கலான வழக்காகப் பன்னிரண்டு ஆண்டுக்காலத்திற்கு நீடித்தது. கிருஷ்ணமூர்த்தியின் சமகாலத்தவரான வேதம் வேங்கடராம சாஸ்திரி என்பவர், சூரி எழுதிய மூல நூலின் மொழிபெயர்ப்பு தான் 'ஹரிகாரிகாவலி' என்று உறுதிப்படுத்திய பின்னரும் கூட இந்த வழக்கு தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருந்தது என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

சூரியின் பெரும்படைப்பு, வேதமொழியில் (வடமொழி) மொழி பெயர்க்கப்படு மளவுக்குப் பெருமை வாய்ந்ததாக இருந்தது என்பதே இப்பூசல் மூலம் நமக்குத் தெரியவரும் உண்மையாகும். எனினும் இவ்வழக்கு தொடர்பான விவரங்கள் நமக்கு ஆர்வமூட்டுவனவாக இல்லை.

சூரி வகுத்த விதிகளுக்கு விளக்கம் தருவதிலும் அவற்றைப் பின்பற்றுவதிலும் அறிஞர்கள் பலரும், ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டனர். அவ்விதிகளுக்குப் பல்வேறு புதுப்புது விளக்கங்கள் அளிக்கப்பட்டன; அவற்றுக்கு ஒரு புனித மணமும் ஊட்டப்பட்டது. இவ்வாறான மிதமிஞ்சிய போற்றுதல் காரணமாக, அக்காலத்திய இலக்கியங்களிலும் பண்டைய இலக்கியங்களிலும் அவை எத்தன்மைத்தாயினும் எவ்வளவு புகழ் பெற்றவை யாயிருப்பினும் கூட, சூரியின் விதிகளுக்கேற்ப எழுத்துப் பிழைகள், சொற்றொடர்கள், ஏன் மொழி நடையையே கூட மாற்றியமைக்கும் நிலை ஏற்பட்டது. இதன் காரணமாக மீண்டும் கடுமையான எதிர்ப்புகள் உருவாயின.

மக்களாட்சியமைப்புள்ள ஒரு நாட்டில் இத்தகைய கடுமையான விதிமுறைகளைத் திணிப்பதென்பது ஓர் இயல்பான முரண்பாடுதான்! இந்தச் செயலால் சின்னையா சூரியே கூட பாதிக்கப்பட்டுள்ளார்.

அவரது 'நீதி சந்திரிகா' நூலை அவரது மைத்துனர் முதலில் திருத்தினார். அதன் பின்னர் அவரது விசுவாசிகள், நீதிசந்திரிகாவை மீண்டும் பாலவியாகரண இலக்கண விதிகளுக்கேற்ப திருத்தியமைத்தனர். இதில் வேடிக்கை என்னவெனில் சூரி எழுதிய 'பாலவியாகரணமு' அவரது நீதிசந்திரிகாவை விட பிந்தைய நூலாகும். அதுவே திருத்தத்துக்கு உள்ளானது.

விழிப்புணர்வு மிக்க சூரியின் ஆதரவாளர்கள் வெவ்வேறு விதமாக சூரியின் இலக்கண விதிகளைப் புரிந்துகொண்டு, அவர்கள் பெற்ற பயிற்சிக்கும் அவர்களின் அனுபவத் தன்மைக்கும் ஏற்பவே செயல்பட்டனர். மொழியைத் தரப்படுத்துதல் என்னும் நோக்கில் அவர்களது செயல்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. 'தரமற்ற, கல்வியறிவு சாராத சொல்லாட்சிகளால் மொழி மாற்றமடையாது; மாறாக மொழித் தூய்மை கெடும்' என்று அவர்கள் நம்பினர். சூரியின் விதிகளுக்குட்படாத எதுவும் இழிவுமொழி, கொச்சைமொழி (கிராமியம்) எனப்பட்டது. வட்டாரப் பேச்சு மொழி வேறுபாடுகள் சூரிக்கு ஏற்புடையதாக இல்லாமையால் அவை இலக்கியப் பயன்பாட்டிலிருந்து நீக்கப்படவேண்டியவையாயின. எந்த விதத்திலும் அவர்களின் மனத்தை மாற்றுவதோ அவர்களை இணங்கவைப்பதோ இயலாததாயிற்று.

கிடுகு வேங்கடராமமூர்த்தி போன்ற வல்லுநர்கள்,

* மொழிகள் எவ்வாறு மாறுதலுக்குட்பட்டன,
* லௌகீக சமஸ்கிருதம் எவ்வாறு வேதமொழியிலிருந்து வேறுபட்டது,
* பண்டைய இலக்கியவாதிகளின் மொழிநடை எவ்வாறு ஒவ்வொருவருக்கும் வேறுபட்டிருந்தது,

என்றெல்லாம் எடுத்துக் கூறியபோதும் அவர்கள் அவற்றையெல்லாம் நம்பத் தயாராயில்லை. சூரியின் பற்றாளர்களான ஒரு சாராரின் இந்த முரட்டுத்தனமான செயல், அதுவும் தலைமையே விரும்பாத நிலையில் நிகழ்ந்து கொண்டிருந்த இந்தச் செயல், தெலுங்கு மொழியை விட வடமொழி இலக்கணப் புலமையில் ஆழ்ந்த அறிவு மிக்க இன்னொரு சாராரை மிகவும் புண்படுத்தியது. அவர்கள் சூரியின் ஆதரவாளர்களை நோக்கிப் பதஞ்சலியின் சொற்களால் கேள்விக் கணைகளை வீசினர். இணக்கமான கருத்து கொண்ட, படைப்பாற்றலை விரும்பிய எல்லோரும் ஓரணியில் திரண்டனர்.

ஆங்கிலக் கல்வி புதிய கல்வித் தடங்களை உருவாக்கியது. அதன்பின், ஒவ்வொன்றையும் மிகவும் நுணுகிப் பார்ப்பதென்பது, படித்த வகுப்பினரிடையே ஒரு பண்பாகவே நிலைத்துவிட்டது. பல்வேறு சமூக நிலைகளிலும் சாதிகளிலும் இருந்த மக்கள், மேலை நாட்டுக் கல்வியைக் கற்கத் தொடங்கியபின், பிழைப்புக்கு வழி

காட்டாத வடமொழி மரபிலக்கியப் படிப்பில் மிகுந்த ஆர்வம் காட்டவில்லை. செய்தித் தொடர்பில் முக்கியத்துவம் பெற்றுவந்த நாளிதழ்களும், பிற தகவல் தொடர்புச் சாதனங்களும் மக்களை ஒருங்கிணைத்து, பேச்சு வழக்கிலிருந்த வேறுபாட்டைக் குறைத்துவந்தன.

புதிய இலக்கிய வகைகள் மக்களின் அழகுணர்ச்சிக் கலையையும், அறிவியல் பண்பு- கலைகளையும் பெருக்க ஆரம்பித்தன. இவையெல்லாம் ஒன்று சேர்ந்து சூரியின் மரபு விதிகளின் புறக்கணிப்பை மிகுதிப்படுத்தின. அவருக்கிருந்த மதிப்பு மெல்ல மெல்லச் சிதைய ஆரம்பித்தது. இவ்வாறு நிகழ்ந்த எல்லாவற்றுக்கும் சூரியை மட்டுமே நாம் குற்றவாளியாக்கி விட முடியாது. கீழ்த்தளத்து மக்கள் மரபியல்வாதியாகவும், அறிஞராகவும், சிறப்புற்று விளங்கிய ஒருவரைத் தங்களின் முன்னோடியாகக் கருதினர்.

ஓர் அந்நிய மொழியின் இலக்கண விதிகளுக்கேற்ப, ஒரு மொழியின் இலக்கணத்தைப் பிய்த்துப் பிடுங்கி ஒரு தையற்காரரைப் போல இணைத்துச் சேர்த்து, எளிதில் புரிந்து கொள்ள இயலாவகையில் செய்த ஒரு சிறு பங்களிப்புக்காக, அவரது போக்கிலேயே நீண்ட நெடுங்காலத்துக்கு அவரை அனுமதித்திருந்த இந்தச் சமுதாயமும் அந்தக் குற்றத்துக்குப் பொறுப்பேற்றாக வேண்டும்.

பரவஸ்து சின்னையா சூரி தெலுங்கு மொழியின் வரலாற்றில் அவருக்கும், அவரது இலக்கண நூலுக்கும் நிச்சயமாக ஓரிடத்தைப் பிடித்துக் கொண்டார் என்பதில் ஐயமில்லை. ஒன்றரை நூற்றாண்டுக் காலத்துக்கு எதிர்ப்பற்ற நிலையில் இருந்த அவர் காலம் மாறியபின் புராதன காலத்துக்குக் துரத்தப்பட்டார். அவருக்கு ஏற்பட்டது மிகப் பெரிய உயர்ச்சி மட்டுமல்ல, மிகப் பெரிய வீழ்ச்சியும் கூட!

சின்னையா சூரி,

- மனத்தால் தமிழர்
- பேச்சால் தெலுங்கர்
- திறமையால் ஆரியர்

எல்லாம் இணைந்த கலவைதான் அவர்; ஆனாலும் கலப்பினப் பிறவியல்ல;

இறந்த காலத்தில் வாழ்ந்து, நிகழ்காலத்தில் தவழ்ந்து, எதிர்காலத்தில் மறைந்து போனவர், அவர்.

அவர் தமது வாழ்நாளில்,

- கடந்த காலத்தை மிக நன்றாகப் பார்ப்பவராகவும்
- நிகழ் காலத்தைப் பார்ப்பதில் கிட்டப் பார்ப்பதில் கிட்டப் பார்வையாளராகவும்
- எதிர்காலத்தைப் பார்ப்பதில் குருடராகவும்

இருந்தவர். அவர் தமக்குத் தாமே நிர்மாணித்துக் கொண்ட, மனித வாழ்க்கையின் கடுமைகளேயறியாத ஒரு தனியிடத்தில் வாழ்ந்தவர்; தமது ஆதரவாளர்களைத் தவிர வேறெந்த மனிதருடனும் சேராமல் இருந்தவர்; எப்போதும் பின்னோக்கிப் பாராத குணமுடையவர்.

தனக்குத் தானே அதிகாரம் கொண்டவராயிருந்த சூரி, தன்னைச் சுற்றியுள்ள, தாம் வாழும் சமுதாயம் மிகப்பெரிய அதிகாரம் கொண்டது என்பதை ஒருபோதும் உணரவே இல்லை!

இப்போது அவர் வரலாற்றில் வாழ்கிறார்!

வாழ்க சூரியின் புகழ்!

# இந்நூலில் இடம்பெற்றுள்ள பெயர்களின் பட்டியல்

(அ) தனிமனிதர்களின் பெயர்கள்

அப்பகவி

ஆபஸ்தம்பர்

இராவிபாதி குருமூர்த்தி சாஸ்திரி

ஈஸ்வர சந்திர வித்யாசாகர்

உதயகிரி சேஷைய சாஸ்திரி

ஒருகண்டி சோமசேகர (கவி) சாஸ்திரி

காஞ்சி இராமானுஜாச் சார்யலு

கலுவலபல்லி ரெங்கநாத சாஸ்திரி

கல்லூரி வேங்கடராம சாஸ்திரி

காருமஞ்சி சுப்ராயுலு நாயுடு

காவலி வேங்கட பொற்றையா

கோமளீஸ்வர பிரபு ஸ்ரீனிவாச பிள்ளை

காஜுல லட்சுமி நரசிம்மம் சிரேஷ்டி

கிடுகு வேங்கடராமமூர்த்தி

கார்கேயர்

குரஜாட வேங்கட அப்பாராவ்

கோவர்த்தன தாஸ்

தஞ்சை நகரம் தேவப் பெருமாளையா
தம்பூரான் தாபீ தர்மாராவ்
தெனாலி ராமகிருஷ்ணா
துவ்வூரி வேங்கடரமண சாஸ்திரி
தூசி ராமமூர்த்தி சாஸ்திரி
துர்ஜதி
நரஹரி கோபால கிருஷ்ணம்ம செட்டி
நர்மல் சங்கர்
பச்சையப்பர்
பதஞ்சலி
பரவஸ்து சின்னையா சூரி
பாணிணி
பால்குரிகி சோமநாதர்
புதூரி சீத்தாராம சாஸ்திரி
புராணம் ஹயகிரீவ சாஸ்திரி
பூரண் சிங்
போதனர்
பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீனிவாசாச்சார்யலு
பகீரா
பரூவா
படுஜனபள்ளி சீதாராமச்சார்யலு
புலுசு வேங்கடரமணைய்யா
பட்ட பாணர்
மாமிடி வெங்கய்யா
மிருத்தியுஞ்சை
ரெங்க நாயகுலு சிரேஷ்டி
ராமானுஜாச் சாரியார்
லல்லூ ஜிலால்
வஜ்ஹல சின்ன சீத்தாராமஸ்வாமி சாஸ்திரி
வத்தம் வாசுதேவ பரபிரம்ம சாஸ்திரி
வத்தியம் அத்வைத பரபிரம்ம சாஸ்திரி

வாருசி
வாமனர்
விஞ்சமூரி கிருஷ்ணமாச்சார்யலு
விஸ்வநாத ஸ்தானாபதி
விஷ்ணு சர்மா
வேங்கடரங்க ராமானுஜாச்சார்யலு
வேதம் பட்டாபிராம சாஸ்திரி
சிஷ்து கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி
ஸ்ரீநாதர்
சாமிநேநி முத்து நரசிம்மம் நாயுடு
வையாகரணம் இராமானுஜாச்சார்யலு

## (ஆ) நூல்கள் - இதழ்களின் பெயர்கள்

அட்சர குச்சமு
அப்ப காவியமு
அமர கோசம்
அஸ்வ சாஸ்திரம்
அஷ்டாத்யாயீ
ஆந்திர தீபிகை
ஆந்திர தாதுமாலா
ஆந்திர நாம சங்கிரஹமு
ஆந்திர பண்டித பிசக்குல பாஷா பேசஜமு
ஆந்திர சப்தசிந்தாமணி
ஆந்திர சப்தானுசாஸனம்
ஆமுக்த மால்யதா
காதம்பரி
குப்தார்த்த பிரகாசிகா
சின்னையா சூரி மரணம்
தசாவதாரம்
நாமலிங்கானுசாஸனம்
நீதி சந்திரிகா
நீதி சங்கிரஹமு

பச்சையப்ப யசோமந்தனமு
பஞ்சதந்திரக் (கதைகள்) கதலு
பட்டாபிராம பண்டிதீயமு
பாடியாந்த்ர வியாகரணமு
பாண்டுரங்க மகாத்மியமு
பிராகிருத சப்தானுசாஸனம்
பிரௌத வியாகரணமு
பண்டிரா பல்லகி
பால வியாகரணமு
பால வியாகரணோத்தியோதமு
பிரௌண்ய நிகண்டு
பூபாளியமு
மிஸ்ர நிகண்டுவு
ராமாபி உதயமு
ராய வாசகமு
வர்த்தமான தரங்கிணி
விக்டோரியா சக்ரவர்த்தினி மகுடாபிஷேக மகோத்சவம் பாடிய ரத்னமுலு
விபக்தி போதினி
விஸ்வ கோசம்
விஷ்ணு சித்தியமு
வியவகார தர்ப்பணமு
சகடரேப பல்யங்கிகா
சப்த லட்சண சங்கிரகம்
சப்த மஞ்சரி
சப்த ரத்னாகரமு
சப்தார்த்த நிகண்டுவு
சித்தாந்த கௌமுதீ
சிம்மகிரி நரஹரி வசனமுலு
சுஜன ரஞ்சனி
சூத்ராந்த்ர வியாகரணமு

சூத்ரார்த்தலு
சூரிய ராயாந்த்ர நிகண்டுவு
ஹரிகாரி காவலி
ஹிதோபதேசம்
ஹிந்து தர்மசாஸ்திர சங்கிரஹமு

## இ. இடப்பெயர்கள்

திருவல்லிக்கேணி
இராமானுஜகூடம்
ஸ்ரீபெரும்புதூர்

# துணை நூல் பட்டியல்

## தெலுங்கு


ஆ.பி. சாகித்ய அகாதெமி : சாகித்யோபான்யா சமுலு-2 ஐதராபாத் 1962.

கோபாலரெட்டி, பண்டிட் (பெங்களூர்) : பிரௌன் லேகலு, திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி 1977.

(பதிப்பு) : பிரௌன் ஜாபுலு, நெல்லூர் வரலாறுகள், நெல்லூர் 1973.

வி. இலட்சுமணரெட்டி : தெலுங்கு ஜர்னலிஸம் - அவதாரண - விகாசம், கோபிசந்த் பப்ளிகேஷன்ஸ், விஜயவாடா, 1985.

பு. இராதாகிருஷ்ணா : வியாவகாரிக பாஷா விகாஸம், விசாலாந்த்ரா பிரகுரனாலயம், விஜயவாடா, 1971, 1982, 1992.

டி. வேங்கடரமண சாஸ்திரி : இரமணீயமு (பாலவியாகரண சமீக்சை) வால்டேர், 1964.

என். வெங்கடராவ் : ஸ்ரீ பரவஸ்து சின்னையா சூரி ஜீவிதமு, வவில்ல ராமஸ்வாமி, சாஸ்துருலு அண்ட் சன்ஸ் சென்னை, 1953.


## ஆங்கிலம்


எஸ்.கே. சாட்டர்ஜி : Languages and Literatures of Modern India, Prakash Bhavan Calcutta, 1962.

ஜி.என். ரெட்டி : The influence of English on Telugu Literature (1800-1950) Tirupati 1988.

**பரவஸ்து சின்னையா சூரி** (1809-1862) மரபிலக்கியக் கல்வியில் தெலுங்கு மொழியிலும், வடமொழியிலும் சிறந்த புலமையாளர்; பள்ளிகளிலும் சென்னை மாநிலக் கல்லூரியிலும் தெலுங்கு மொழியைக் கற்பிப்பதிலேயே அவரது வாழ்நாளில் மூன்றில் ஒரு பகுதி கழிந்தது.

அவரது 'பாலவியாகரணமு' என்னும் இலக்கண விதிமுறை நூலும், 'நீதி சந்திரிகா' எனும் உரைநடை நூலும் அவற்றுக்கு முன் பாட நூல்களாக இடம் பிடித்திருந்த பிற நூல்களையெல்லாம் ஒதுக்கிப் புறந்தள்ளிவிட்டுக் கட்டாயப் பாடநூல்களாக இடம் பெற்றன.

சூரியின் விதி சார்ந்த அணுகுமுறைகள் ஒரு புதிய மரபிலக்கியப் பாதையை வகுத்ததோடன்றி, அவரது இலக்கண விதிகளுக்கேற்ப பண்டைய இலக்கியங்களைக் கூடத் திருத்தியமைத்திடும் நிலையை உருவாக்கிவிட்டன. தனக்கெனவோர் தனிப் பாதையை வகுத்துக் கொண்டு மக்களாலும், ஏன் அவரது பற்றாளர்களாலும் கூட நெருங்கமுடியாத அளவுக்கு ஓர் உயர் தனிச் செல்வாக்குடன் திகழ்ந்த தலைசிறந்த புலமையாளர் அவர். அவர் ஒரு தனியாதிக்க வல்லாண்மையாளர் என்றாலும் கூட, தெலுங்கு மொழி இலக்கிய வரலாற்றில் அவர் என்றென்றும் நினைவு கூரப்படுவார்.

இதன் ஆசிரியர் **புதராஜு இராதாகிருஷ்ணா** (1932) வால்டேரில் உள்ள ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் 1953- ல் பி.ஏ (ஆனர்சு) பட்டம் பெற்றவர். இதே பல்கலைக் கழகத்தால் 'ஆதி தெலுங்கு கல்வெட்டுக்களின் ஒரு வரலாற்று இலக்கணம்' என்னும் ஆய்வுக்காக பி.எச்.டி. பட்டம் வழங்கப் பெற்றார். சிராளாவில் உள்ள ஒரு கல்லூரியில் தெலுங்கு விரிவுரையாளராக 15 ஆண்டுகளும், ஐதராபாத்தில் உள்ள தெலுங்கு அக்காதெமியில் ஆராய்ச்சித் துறைத் தலைவராக 20 ஆண்டுகளும், ஐதராபாத் பல்கலைக் கழகத்தில் ஒப்பிலக்கியத் துறையில் திருவருகைப் பேராசிரியராகவும் பணியாற்றியவர் . ஐதராபாத் ஈநாடு இதழியல் பள்ளியில் 1990-முதல், முதல்வராக இருந்து வருபவர்.

இவரது படைப்புகளில் வாஸ்துபாத கோசம் (1968), ஆதி தெலுங்கு கல்வெட்டுகள் (1971), வியாவகாரிகா பாஸ விகாரம் (1972, 1981,1992) ஈநாடு பாஷாஸ்வரூபம் (1981), ஈநாடு வியவகார கோசம், சாகித் வியாசாலு பாஷா சாஸ்திர வியாசாலு (1990) போன்றவை குறிப்பிடத் தக்கவை. இவரது தெலுங்கு இலக்கிய மேற்கோள் அகராதி அச்சில் உள்ளது.

இந்நூலைத் தமிழாக்கம் செய்துள்ள கவிஞர் டாக்டர் **ஆனைவாரி ஆனந்தன்** (1950) சென்னை, மதுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் பயின்றவர். தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியத்தில் சிறப்பு அலுவலர் (மொழிபெயர்ப்பு) ஆகப் பணிபுரிபவர். கவிதை, இலக்கியம், மருத்துவம், நாவல் ஆகியவற்றில் நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்தவர். தற்போது தமிழ் சித்த மருத்துவ நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

Paravastu Chinnaya Suri (Tamil)
ISBN 81-260-0598-X

Rs.25.